# மங்கையர் மலர்

ஜனவரி '89

ரூ. 4/-



உள்ளே...

வீராங்கனை பெனாசீர்!

89 எப்படி இருக்கும்?

# கொக்கோபி

## கிறிஸ்ப் வழங்கும் உன்னத படைப்பு




கிறிஸ்ப் கொக்கோபியில்
கொக்கோவா பெருமளவில்
அடங்கி உள்ளது. அதன்
அருசுவை; பிஸ்கட்டுகளுக்கு ஒரு
எல்லை. கிறிஸ்ப் மேலும் உங்களுக்கு
வழங்குகிறது. மில்க் பிகிட்ஸ், குளுகோஸ்
கிரிம்ஸ் (ஆரஞ்சு, அன்னாசி, ஏலக்காய்,
சாக்லெட் போன்ற பல தரப்பட்ட
சுவை கொண்டவை)
கிறிஸ்ப் ட்ரீட் மற்றும் கே. ஜெம் வகைகள்.



KRISP
Biscuits

தரமான தயாரிப்புகள்

பிரமோத் புட்ஸ் பி லிட். 109, பத்ரபாளையா, மைசூர் ரோடு, பெங்களூர்-560 039.

ARIES/PF/BNG



# வீராங்கனை பெனாசீர்

பிறந்ததில் இருந்தே வறுமையில் உழல்பவர்களுக்கு வறுமையும், வாழ்க்கையின் கொடுமைகளும் பழக்கப்பட்டு போய் விடும். எதிராளியின் அலட்சியம், மனிதாபிமானமற்ற செயல், கேவலப்படுத்தும் பேச்சுக்கள் இவைகளெல்லாம் சகஜம். அவைகளையே தங்கள் வாழ்வின் உரமாக வைத்து மேலேறி வாழ்க்கையிலே வெற்றிக் கொடி நாட்டியவர்கள் ஆயிரக்கணக்கில் இருக்கிறார்கள். ஆனால் —

மிகச் சிறந்த குடும்பத்தில் பிறந்து, வசதியாக வாழ்ந்து, உயர்ந்த படிப்பைப் படித்து, வாழ்க்கையில் இறங்கும் போது தலைகுப்புற தள்ளப்பட்டால் —

நேற்று மரியாதை, பெரிய மனிதரின் பெண் என்னும் கௌரவம் —

இன்று கிரிமினல் கைதியினும் கேவலமான நிலை.

இப்படி நிலைமை தலைகீழாக மாறும் போது யாருக்கும் மனம் பேதலிக்கத்தான் செய்யும். ஒன்று புலம்பிக் கதறி மூலையிலே ஒடுங்கி விடுவார்கள். அல்லது தற்கொலை செய்து கொண்டு விடுவார்கள்.

ஆனால் பெனாசிர் எனும் பெண் ஒரு நாட்டின் அதிபர் பூட்டோவின் மகளாக சகல மரியாதைகளுடன் பவனி வந்தவர், மேலை நாடுகளில் கல்வி பயின்றவர், அன்பே உருவான பெற்றோர்களின் செல்வ மகளாகத் திகழ்ந்தவர்.

ஒருநாள் இரவு அமைதியாக மாளிகையில் உறங்கிக் கொண்டிருந்த போது அன்னையால் அலறி அடித்துக் கொண்டு எழுப்பப்பட்டார். 'நாட்டை ராணுவம் பிடித்து விட்டதாம். அப்பாவைக் கொல்ல வருகிறார்கள்' என்று செய்தி சொல்லப்பட்டார். அதே நேரம் தந்தை கைது செய்யப்பட்டார். அன்னையும், மகளும் சிறைக் கைதிகளானார்கள்.

அன்றிலிருந்து அவர்கள் வாழ்வில் அனுபவித்த கொடுமைகள் கொஞ்ச நஞ்சமல்ல.

அந்த இளம் பெண் கிரிமினல் குற்றவாளிகள் அடைக்கப்பட்ட சிறையில் அடைக்கப்பட்டார். பல முறை சிறைக் கொடுமைகளை அனுபவித்தார். நாடு கடத்தப்பட்டார். சகோதரர் மர்மமான முறையில் இறந்தார். பல முறை வீட்டுச் சிறையில் வைக்கப்பட்டார்.

அன்பே உருவான தந்தை தூக்கிலிடப்பட்ட பிறகு அவருடைய பிரேதத்தைக் கூட பார்க்க முடியாதவர் ஆனார்!

வாழ்க்கையின் ஓரத்திற்கே துரத்தப்பட்ட அந்தப் பெண்ணிற்கு என்ன நெஞ்சுரம்! கொஞ்சம் கூட மனம் தளரவில்லை.

ஜியா எனும் இரும்பு மனிதனின் ராணுவப் பிடியில் பாகிஸ்தான் சிக்கிக் கொண்ட போதும், இவரைக் கைதியாக்கி வாட்டிவதைத்த போதும் மக்கள் சக்தியை ஒன்றுபடுத்தினார். 'என் தந்தை விட்டுச் சென்ற பணியைத் தொடருவேன்; மக்களுக்கு இராணுவம் இழைக்கும் கொடுமைகளில் இருந்து விடுதலை பெற்றுத் தருவேன்' என தந்தையின் சமாதியில் எடுத்த சபதத்தை நிறைவேற்ற சொல்லொணா துயரங்களை அனுபவித்தார்.

தந்தை தொடங்கிய 'பாகிஸ்தான் மக்கள் கட்சி'க்குத் தலைமையேற்று தொடர்ந்து இரும்பு மனிதர்களை எதிர்த்துப் போராடினார்!

இன்று —

'கடவுள் மீது நம்பிக்கை வைத்தவர்களை
கடவுள் ஒருபோதும் கைவிடுவதில்லை'

என்ற குரானின் வாசகம் மெய்யானது! ஆம், இந்தப் புனித வாசகங்கள் தான் அந்த வீர மங்கை வெற்றித் திருமகளாக, மக்களின் பேராதரவு பெற்று பாகிஸ்தான் பாராளுமன்றத்தில் நுழைந்த போது ஓதப்பட்டது.

இத்தனைக்கும் நடுவில் அவர் தன் பெண்மையையும் மறக்கவில்லை. கடந்த வருடம் திருமணம் செய்து கொண்டார். அந்தத் திருமணத்தை எளிமையாக முடித்துக் கொண்டதோடு அல்லாமல், கண்ணாடி வளையல்களை அணிந்து கொண்டார்.

''பெண்கள் தங்கத்திற்காக ஏங்குவது தவறு. நான் அதற்கு ஒரு முன்னுதாரணமாக இருக்க வேண்டும் என்பதற்காகத்தான் என் திருமணத்தில் கண்ணாடி வளையல்களை அணிந்து கொண்டேன்'' என்றாராம். மக்களின் இதயத்திலே இவரல்லவா இடம் பெறுவார்!

நேற்றைய சிறைக் கைதி, இன்று நாட்டின் பிரதமர்!



புட்டோ, இந்திராகாந்தி, பெனாசிர்.

# உங்கள் குடும்ப ஆரோக்கியத்திற்கான டின்

## 1கிலோ சாக்கலேட் காம்ப்ளான்



Complan®

COMPLETE PLANNED FOOD
CHOCOLATE FLAVOUR

No need to add milk

FREE!
Collect a ceramic mug with this pack.

இலவசம்!




இரண்டு 500 கிராம் டின்களுக்குப் பதில், வாங்குங்கள் 1 கிலோ சாக்கலேட் காம்ப்ளான் டின், மிச்சமாக்கிடுங்கள் 4 ரூபாய்.

அத்துடன் ஒரு பீங்கான் குவளை இலவசம். உங்கள் குடும்பத்தினருக்கு அன்றாடம் தேவைப்படும் மூலாதார சத்துணவுகள் கொண்டதாகும், காம்ப்ளான்.

வாங்குங்கள் இன்றே.

23
மூலாதார
சத்துணவுகள்
திட்டமிட்ட விகிதங்களில்

**காம்ப்ளான்®**

GX/58/213 TML



* கணவர் சர்தாரியுடன் பெனாசிர்

வாழ்வில் வருத்தப்பட்டு, மனம் சோரும் பெண்களுக்கெல்லாம் பெனாசிர் ஒரு வழிகாட்டியாகத் திகழுகிறார் என்றால் அது மிகையாகாது. முப்பத்து நான்கே வயதான அந்தப் பெண்ணின் வீரமும், தீரமும் ஒரு காவியம் பாடக்கூடிய அளவு போற்றத்தக்கது.

இப்போதும் அவருடைய போராட்டம் ஓயவில்லை. கையில் மூன்று மாதக் கைக் குழந்தை. மக்கள் தன் மேல் வைத்த மாபெரும் நம்பிக்கையைக் காப்பாற்ற வேண்டிய பொறுப்பு. அரசியல் சூதுவாதுகளுக்கிடையே புகுந்து வெல்ல வேண்டிய சாமர்த்தியம், அனைத்துத் தரப்பிலும் போராடிக் கொண்டுதான் இருக்கிறார்!

பாகிஸ்தான் தேர்தலில் வெற்றி பெற்று பிரதமராக முடிசூடி, முகமதிய நாடுகளின் முதல் பெண் பிரதமர் என்ற பெருமையையும், உலகிலேயே வயதில் இளைய பிரதமர் என்ற பெருமையையும் பெற்றிருக்கிறார்.

இந்த பெனாசிர் எனும் வீராங்கனை தொடர்ந்து வெற்றிகளைப் பெற்று பெண் குலத்துக்கு எல்லாம் ஒரு நம்பிக்கை நட்சத்திரமாக விளங்க வேண்டும் என பிரார்த்திப்போம்.

— மஞ்சுளா ரமேஷ்

# புதியவை அறிமுகம்

**ஸ்ரீபெட் புதிய 'பெட்' பாட்டில்கள் & ஜாடிகள்**

ஸ்ரீராம் குரூப் நிறுவனத்தாரின் புதிய நிறுவனம் 'ஸ்ரீபெட்.' ஸ்ரீபெட் பாட்டில்கள் மற்றும் ஜாடிகளைத் தயார் செய்கிறது.

ஊறுகாய்களைப் போட்டு வைப்பதிலிருந்து பயனுள்ள மளிகைச் சாமான்களைப் பாதுகாக்க வைப்பது வரை எல்லாவற்றுக்கும் இந்த ஸ்ரீபெட் பாட்டில்கள், ஜாடிகள் உபயோகப்படும். குறிப்பாக எந்தவித இரசாயண மாற்றமும் இந்த பாட்டில்களின் மூலம் ஏற்படாதாம்.



* ஸ்ரீபெட் பாட்டில்கள் அறிமுக விழாவில்......

# எந்த வண்ணம் உங்கள் எண்ணம்?



நீங்கள் ஆணாயினும் சரி, பெண்ணாயினும் சரி, உங்களுக்குப் பிடித்த நிறத்தை வைத்தே, உங்கள் குணநலன்களைக் கண்டு பிடிக்க முடியும். அதுமட்டுமா? உங்கள் உடல்நலம், மனநலம் பற்றியும் தெரிந்து கொள்ளலாம்.

**கறுப்பு :**

இந்த நிறத்தைத் தெரிவு செய்பவர் வம்பை விலைக்குவாங்கும்முன்கோபிதான். கறுப்பே எனக்குப் பிடிக்காது என்பவரிடம் குறிப்பிடத்தக்க குணம் எதுவும் இருப்பதில்லை.

**நீலம் :**

நீலத்தை விரும்புபவர் நிதான புத்தியுடன் எந்தச் சூழ்நிலையிலும் சமாளிப்பார். இந்தக் கலரை வெறுப்பவர்கள் எதற்கெடுத்தாலும் உணர்ச்சிவசப்படுகிறவராகத்தான் இருக்க வேண்டும்.

**பழுப்பு :**

பிரவுன் கலரைத் தேர்ந்தெடுப்பவர் அற்புதமாகக் காதலிப்பார். சிறந்த முறையில் நட்பு கொள்வார். ஆனால் சின்னஞ்சிறு துரோகத்தைக் கூட மறக்கவோ, மன்னிக்கவோ மாட்டார்கள்.

பழுப்பு நிறத்தை வெறுப்பவர் விளையாட்டில் உண்மையான அக்கறை கொண்டிருப்பார். எதிலும் பங்குவலாக இருப்பார். சொன்ன வார்த்தையைக் காப்பாற்றுவார்.

**பச்சை :**

இந்த நிறத்தை விரும்புகிறவருக்கு, எதையும் மற்றவர்களிடமிருந்து மறைக்கத் தெரியாது. அவர்கள் தங்களைப் பற்றி, தங்கள் நடவடிக்கை பற்றிப் பெருமிதம் கொண்டிருப்பார்கள். நீங்கள் உங்களைச் சுற்றி இருப்பவர்களால் மோசமாக நடத்தப்பட்டிருந்தால்தான், 'பச்சையா?' வேண்டாம் என்பீர்கள்.

**ஆரஞ்சு :**

வாழ்க்கையில் உயர்ந்த இலட்சியம் உள்ளவர் (பதவி, பணம், ஆரோக்கியம் பற்றி) ஆரஞ்சை விரும்புபவர்.

**பிங்க் :**

சுயநலமுள்ளவர், சிரழிகிறவர், கர்வமுள்ளவர் மற்றும் குழந்தைத்தனமுள்ளவர்தான் பிங்க் கலரை விரும்புபவர். தன்னுடைய யதார்த்தமான பேச்சால் மற்றவர்களுக்கு இடைஞ்சல் ஏற்படுத்துகிறவரும், காலம், பணம், சக்தி போன்றவற்றை வீணடிக்க விரும்பாதவரும் 'பிங்க்' வேண்டாமென்று சொல்லி விடுவர்.

**சிவப்பு :**

உலகையும், அதன் மக்களையும்நேசிக்கிறவர்சிவப்புநிறத்தைக்கட்டாயம் விரும்புவார். சுறுசுறுப்பு, சாதிக்கும் தன்மை உடையவராயிருப்பார்.

தன்னம்பிக்கையற்றவர்கள் சிவப்பை தேர்ந்தெடுப்பதில்லை.

— தேவநாதன்.

உங்கள் குழந்தைக்கு ஊட்டுங்கள் முட்டையின் புரதச் சத்தூட்டத்தை!



# ஃபாரெக்ஸ்®-எக்

## 6 மாதம் முதல்

புதிய ஃபாரெக்ஸ் எக் — இது, உங்கள் குழந்தையின் முழு நிறைவான வளர்ச்சிக்குத் தேவையான புரதச் சத்தைக் கொண்டுள்ளது. இது, நன்றாக முன்பே பக்குவப் படுத்தப்பட்டது. ஆகவே இது, குழந்தையின் மென்மையான வயிற்றின் ஜீரண சக்திக்கு ஏற்றதாகும்.

**ஃபாரெக்ஸ்—சுவையுடன் வளரும் வழி**




இதோ ஃபாரெக்ஸ் வளர்ச்சி வழி: 1. பால் சேர்த்த ஃபாரெக்ஸ் சீரியல் 2. ஃபாரெக்ஸ்-வெஜ் 3. ஃபாரெக்ஸ்-எக்

GX/32/203 TML

# ஆண்களும் நளபாகம் செய்யலாமே!



சமையல் பிரச்னை பெரும் பிரச்னை! பெண்களுக்கே பிரச்னையாகிவிட்ட விஷயம்! பெண்டாட்டியைப் பிரசவத்துக்கு அனுப்பிவிட்டு, ''எப்ப வந்து தொலைப்பாளோ தெரியல்லே! ஹோட்டல் சாப்பாடு நாக்கு வெறுத்துப் போச்சு! என்று அலுத்துக் கொள்பவர்கள், பிரம்மச்சாரியாகத் தனிக்குடித்தனம் நடத்தும் இளைஞர்கள்! இரண்டுங்கெட்டான் வயதில் மனைவியைப் பறி கொடுத்துவிட்டு தன் வயிற்றைக் கழுவ நினைக்கும் சிலர் இவர்களுக்கெல்லாம் ஹோட்டல் உணவுப் பிரச்னை! வேளா வேளைக்குக் கிடைப்பதும் இல்லை.

இக்கட்டுரை இவர்களுக்கு மட்டுமே! வேலைக்குப் போகும் மதராசிகளுக்கும், உதவும் பாவம்!

ஒரு 'பிரெட்'டை முதல்நாளே வாங்கி வந்துவிடுங்கள். எல்லா உணவையும் விட உடலைக் கெடுக்காத அதிகம் விலை ஏறாத மலிவு உணவுப் பொருள் இது. இதில் பல மாயாஜாலம் செய்யலாம்!

1. பிரெட் வெஜிடபின் கேசரி: பச்சைக் காய்கறியான காரட், தக்காளி, கொத்து மல்லி, முட்டைக்கோஸ் இவற்றை (தக்காளி தவிர) சீவவும். நேரமில்லாதவர்கள் மிக்ஸியில் போடவும். எல்லாம் பூவாக வரும்.

'பிரெட்'டை எடுத்து மிக்ஸியில் போடுங்கள். தேங்காய்த் துறுவலாக வரும். எல்லாவற்றையும், தக்காளிப் பழத்தைத் துண்டு துண்டாக்கி நறுக்கிப் போட்டுக் கலக்கவும். உப்புத் தூள் போடவும். 4 ஸ்லைஸ் பிரெட் உங்கள் வயிற்றை நிரப்பி மலர வைக்கும். அடுப்பு துடுப்பு இல்லாமலேயே உடுப்பை மாட்டிக் கொண்டு ஆபீஸ் போகலாம்! 'சீப்' அயிட்டம் சாப்பிட்டே 'சீஃப்' ஆகிவிடலாம்.

2. நாக்கு காரசாரமாகக் கேட்கிறதா? பச்சை மிளகாய், இஞ்சியை மட்டும் (நாக்கு ருசிக்கேற்ப) மிக்ஸியில் அரைக்கவும். அதிகம் நீர்விடக் கூடாது. காரம், தக்காளியுடன் 'பிரெட்' ஸ்லைஸ்களைப் போட்டே மிக்ஸியில் அடிக்கவும். எடுத்து வைத்துக் கொண்டு சாப்பிடுங்கள். தொட்டுக் கொள்ளக் கூட எதுவும் வேண்டாம்.

3. பிரெட் மிக்ஸர்: மாலையில் கொறிக்க!

பொறி (அரிசிப் பொறி), பொட்டுக் கடலை, நிலக்கடலை இவற்றை வாங்கிக் கொண்டு வாருங்கள். லேசான கார மிளகாய்ப் பொடி தூவவும். 'பிரெட்' பவுடருடன் கலக்கவும். ருசியைப் பாருங்கள். மிச்சம் எரிபொருள்! கொலஸ்டிரால் இல்லை!

4. மதிய உணவு செய்யும் 'ரிடையர்' ஆன இல்லத்தரசர்களானால் 'பிரெட்கோசுமலி' செய்யலாமே! பயத்தம்பருப்பை ஊற விடுங்கள். காரட்டைத் துருவுங்கள். தக்காளியை அழகாக வட்டமாக நறுக்குங்கள். பச்சை வெங்காயத்தை நறுக்கவும். 'பிரெட்'டை மிக்ஸியில் அடித்துப் பூவாக்கி இவற்றுடன் கலந்து கொத்துமல்லி, பச்சை மிளகாய், உப்பு கலந்து விடுங்கள். ஓர் எலுமிச்சம் பழம் பிழியவும். 'டேஸ்ட்' பாருங்கள்! துளிக் கூட வீணாக்காமல் உண்பீர்கள்.

5. முட்டை போடுவீர்களா? (நீங்களல்ல!) உணவில்! முட்டையை வேகவிடவும். 'பிரெட்'டுடன் மிக்ஸியில் அடித்தால் இரண்டுமே கலந்து உசிலியாகிவிடும். மிகுதி முறை அஃதே. இது 'பிரெட்' உசிலி.

திடீரென்று உங்களை ஆறு மாதம் நம் உணவே கிடைக்காத லிபியாவுக்கு அனுப்பினால் (அலுவலகத்தில்!) சமாளிக்கலாம் இந்த முறைகளால்.

6. சரி ஐயா! நாக்கு திடீரென்று இனிப்புச் சுவை கேட்டால் சுலபமாக என்ன செய்யலாம் என்ற தவிப்பா? அதையும் தவிர்க்கலாம்.

அவல் பொரியை வாங்கி மிக்ஸியில் பொடித்துக் கொள்ளுங்கள். முந்திரிப் பருப்பை வறுத்து 'பிரெட்' ஸ்லைஸ்களுடன் பொடிக்கவும். சர்க்கரை ஏலக்காயுடன் சேர்த்து மிக்ஸியில் போடவும். ஒரு கிண்ணத்தில் போட்டுக் கொண்டு ஸ்பூனுடன் உட்காருங்கள். தனியாகத்தானே இருப்பீர்கள்! பாதாம்பருப்பிலிருந்து எத்தனையோ வாங்கிக் கொள்வீர்களே! அதையும் சேர்த்து சாப்பிடுங்கள். புஷ்டிக்குப் புஷ்டி. இஷ்டத்துக்கு இஷ்டம் "ருசியானதொரு" 'பிரெட்' புட்டு.

மனைவி பிறந்தகத்திலிருந்து வந்தால், "உடம்பு துரும்பாகி விட்டீர்களே" என்று சொல்வார்களா? 'நான் இல்லையே! அதான் நல்லா பாதாமும் பிஸ்தாவுமா சாப்பிட்டு உடம்பு நல்லாயிருக்கு" என்று நினைத்துக் கொள்வான்.

— சித்ரா.

---

குழந்தை எழுத்தாளர்களுக்கு எல்லாம் நவம்பர் பதின்மூன்றாம்தேதி ஒரே மகிழ்ச்சி! காரணம், மதுரை மத்திய பல்கலைக்கழகத் துணைவேந்தர் கி. வேங்கட சுப்ரமண்யம்தான் —

விரைவிலேயே புதுவை மத்திய பல்கலைக் கழகத்தில் குழந்தை இலக்கியப் பண்ணை ஆரம்பிக்கப் போகிறார்களாம்! அதுமட்டுமில்லை, குழந்தை எழுத்தாளர் சங்கம் வெளியிட்ட இருபது புத்தகங்களையும் நூறு பிரதிகள் வாங்கப் போகிறார்களாம்!

எழுத்தாளர்களின் மகிழ்ச்சிக்குக் கேட்பானேன்! குழந்தை எழுத்தாளர் சங்கம் நேருஜி நூற்றாண்டு விழாவையும், குழந்தைகள் தினத்தையும் கொண்டாடிய போதுதான் இத்தகவல்கள் வெளியாயின. விழாவில் தமிழக அரசின் வணிக வரி, அறநிலையத் துறை கமிஷனர் கு. ஆளுடைய பிள்ளையும், எழுத்தாளர் சிவசங்கரியும் கலந்து கொண்டனர்.



"தூய்மையான சீயக்காயின்
அனைத்து நலன்களும்
கொண்டது
கோத்ரெஜ் உத்தரவாதம்
முழுமையாய் நிறைந்தது"










அழகிய
கேசத்திற்கான
சோப்.

## திரைக்குப் பின்னால் — 8

ஒரு சிறிய குழந்தை கூட இன்றைக்கு டிஸ்கோ ஆடுகிறது. "ராஜா... ராஜாதி ராஜன் இங்கே. ராஜா..." என்று உடம்பை முறுக்குகிறது. திரைப் படங்களின் உபயத்தால் நடுக் கூடத்தில் டி.வி.யில் பார்த்து ஆடாத ஆட்டமெல்லாம் ஆடுகிறார்கள். குழந்தை என்ன, பெரியவர்கள் கூட உடம்பை நெளிக்கத் தயாராகி விட்டார்கள்.

இப்போது நடனம் இல்லாத படம் எது? முன்பு நடனம், காதல் பாட்டு எனத் தனியாகவாவது இருந்தது. இப்போது எல்லாம் டிஸ்கோ மயம்தான். காதலனும், காதலியும் ஆடும் ஆட்டத்தில் காதலைக் காணோம்! பார்ட் பார்ட்டாக ஆடுகிறார்கள். அதைப் பார்த்து வீட்டில் நம் குடும்பமே ஆடுகிறது.

இப்படி வீட்டையும், சினிமா உலகையும் ஆட்டிப் படைத்துக் கொண்டிருப்பவர்கள் நடன இயக்குனர்கள். அவர்களில் தமிழ்ப் படத்துறையைப் பொறுத்தவரை முன்னணியில் இருப்பவர் 'புலியூர் சரோஜா!

அதென்ன புலியூர்? இவரது சொந்த ஊரா?

"இல்லைங்க. நாங்க முன்னாடி குடியிருந்த தெரு புலியூர் தெரு. ஒரு புதுமையா இருக்கட்டுமேன்னு புலியூர் சரோஜான்னு வச்சுக்கிட்டேன். எனக்கு சொந்த ஊரு திருநெல்வேலி என்கிறார்.

இவர் ஆட்டுவிக்காத நடிகர் நடிகைகள் இல்லை. இரண்டு தலைமுறையினரைப் பார்த்து விட்டார். இவரைப் பார்த்தவுடனே முதலில் கேட்கத் தோன்றிய கேள்வி —

"இப்போல்லாம் பரத நாட்டிய டிரெஸ்ஸைப் போட்டு கதாநாயகிகளை அசிங்கமா ஆடவிடறீங்களே? நீங்க வேறு ஏதாவது டான்ஸ் போட்டுக்குங்க. ஒரு புனிதமான கலையை ஏன் இப்படி களங்கப்படுத்தறீங்களே?"

"ரைட். நான் களங்கப்படுத்தறேன்னே வச்சுக்குவோம். ஆமா, பெரிய நடனமணிகள்ளாம் பரத நாட்டியம் நிகழ்ச்சி நடத்தறாங்களே, கடைசியிலே குறவன் — குறத்தி நடனம், சிங்கன் — சிங்கி டான்ஸ் அப்படீன்னு ஏன் கொச்சைப்படுத்தறாங்க? அப்படியே புனிதமா பரத நாட்டியத்தோட நிறுத்திக்க வேண்டியதுதானே?

அதுதான் போகட்டும். பரத நாட்டியத்துக்குத் தலைமை தாங்க நல்ல கலை விற்பன்னர்களை கூப்பிட வேண்டியதுதானே? ஏன், சினிமா நடிகர், நடிகைகளைக் கூப்பிட்டு ஆசீர்வதிக்கச் சொல்றாங்க?

அதுக்கும் மேலே, பரதநாட்டியம் கத்துக்கிட்டவங்க எங்கிட்ட வந்து சினிமாவுல நடன சான்ஸாவது வாங்கிக் கொடுங்கன்னு கேக்கறாங்களே? அது ஏன்?

ஏன்னா, சினிமா அவ்வளவு சக்தி வாய்ந்த மீடியமா போச்சு. கோடிக்கணக்கான மக்கள் விரும்பும் ஒரு சாதனமா இருக்கு. அதுல தாங்களும் இடம்பெற மாட்டோமான்னு ஒவ்வொருத்தரும் ஏங்கறாங்க.

இப்படி கோடிக்கணக்கானவங்க விரும்பிப் பாக்கறாங்களே? என்னத்தைப் பாக்கறாங்க? அந்தக் காலத்துல சிவாஜி, சாவித்திரியம்மாவோட உணர்ச்சிகரமான நடிப்பையெல்லாம் விரும்பினாங்க. இப்ப அதைப் போட்டு 'ஐயோ, அறுக்கறாண்டா'ங்கறாங்க. அஞ்சு ஃபைட், நாலு டான்ஸ், மூணு





நடிகர் கார்த்திக் நடனக் குழுவுடன்.

டயட் இருக்கா? ரைட் பாக்கலாம்'ங்க றாங்க. இப்போ எல்லாம் வேகம்தான்.

இவங்கள நம்பி லட்சக்கணக்கல பணத்தைப் போடற தயாரிப்பாளர் அவங்க என்ன விரும்பறாங்களோ அதைத்தான் கொடுப்பாங்க. அதனால தயாரிப்பாளர் சொல்றதைத்தான் நாங்க செய்ய முடியும்!

இப்போ பாருங்களேன், ரோட்ல சைக்கிள் ஓட்டறவன் டான்ஸ் ஆடிக்கிட்டே ஓட்டறான். பெண்கள் வீட்டுக்குள்ள ஆடிப் பாக்கறாங்க.

ஒண்ணுமில்லை, ஒரு படத்துல மடிசார் புடவையோட கதாநாயகி 'டிஸ்கோ' ஆடறது போல வச்சிருந்தேன். எனக்கு ஒரு யோசனை. ஆமா, இதுக்கு ஏதாவது எதிர்ப்பு வருமோன்னு. நானும் படம் பார்த்து விட்டு வெளியே வந்தவுடனே, நாலு மாமிகள் வந்துட்டாங்க....

ஹா... அந்த டான்ஸ் ரொம்ப அருமையா போயிடுத்து, போங்கோ!'' என்று ஒரு ஆட்டமே ஆடிக் காண்பித்து விட்டார்கள். இதற்கு என்ன சொல்கிறீர்கள்? டேய், எங்க டிஸ்கோ ஆடிக் காட்டு மாமாவுக்கு

# ஆடாத ஆட்டமெல்லாம் ஆடி...!

* சக நடனமணிகளுடன்.



எனப் பெரியவர்களே குழந்தைகளை உற்சாகப்படுத்துகிறார்கள்.

எங்கே பார்த்தாலும் டான்ஸ் மயம்தான். டாக்டர், இஞ்சினியர் எல்லாம் எங்கிட்ட வந்து, எனக்கு ஒரு சான்ஸ் குடுங்களேன், பிரமாதமா ஆடிக் காட்டறோம்ங்கறாங்க.. இதுக்கு என்ன சொல்றீங்க....?''

என்று பொரிந்து தள்ளி விட்டார் சரோஜா.

''இந்த மாதிரி விரசமால்லாம் ஆட வைக்கறீங்களே? நீங்களும் ஒரு பெண். அது நம்ப கலாசாரத்துக்கு எதிரா இல்லையா?''

''அதுதான் சொன்னேனேம்மா. இதையெல்லாம் விரசம்னே யாரும் நினைக்கறதில்லை. நம்பளுக்கு இந்த மாதிரி டான்ஸ் ஆட ஒரு சந்தர்ப்பம் கிடைக்காதான்னு பெரிய மனுஷன்லேர்ந்து சின்ன மனுஷன் வரை ஏங்கறான். அப்படி ஒரு கிளர்ச்சியை ஏற்படுத்தியிருக்காங்க. தயாரிப்பாளரும் இப்படியெல்லாம் ஆட்டங்களை படத்துல போட்டாதான் படம் ஓடுதுங்கறாங்க. நான் 'கம்போஸ்' பண்ணிதான் ஆகணும். இல்லைன்னா என்னை ஒதுக்கிட்டு போயிடுறாங்க....''

இருபத்தி மூன்று ஆண்டுகளாக திரைப் படத் துறையில் இருக்கும் சரோஜா முதலில் பி.ஆர். சோப்ராவிடம் உதவியாளராகவே பணியாற்றி இருக்கிறார். பிறகு எம்.ஜி.ஆர். அவர்களின் குழுவில் இருந்து மஞ்சுளா, லதா போன்றவர்களுக்கு நடனம் சொல்லித் தந்திருக்கிறார். எம்.ஜி.ஆர். அவர்கள் அளித்த ஊக்கத்தின் பேரில் நடனமாஸ்டராகத் தனிப் பொறுப்பேற்றாராம்.

''கொஞ்ச நாளைக்கு முன்பு வரை கூட திரைக்குப் பின்னால் இருந்த எங்களைப் பற்றி மக்களுக்குத் தெரியாது. ஏ.வி.எம். நிறுவனத்தினர்தான் நடிக, நடிகையர் ஒரு படத்துக்கு எவ்வளவு முக்கியமோ, அவ்வளவு முக்கியம் திரைக்குப் பின்னாடி இருக்கிற டெக்னீஷியன்ஸூம் என்று எங்களுக்கெல்லாம் பப்ளிசிடி கொடுத்தாங்க.'' 'சகலகலா வல்லவன்' அப்போ எவ்வளவு பப்ளிசிடி. அதிலேருந்துதான் எங்களையெல்லாம் சாதாரண ஜனங்களுக்கும் தெரிய ஆரம்பிச்சது. சகலகலா வல்லவன்ல 'இளமை, இனிமை.....! ஆடற கமல் மாதிரி ஆடாதவங்க யாரு...' என்று மீண்டும் நடனத்துக்கே பேச்சைத் திருப்புகிறார்.

இவரைப் பேட்டி எடுத்துக் கட்டுரையாக எழுதுவதை விட வீடியோவாக எடுக்க வேண்டும். பேட்டியையே ஒரு நடன நிகழ்ச்சி போல நடத்திக் காண்பித்து விட்டார். அந்த அளவிற்கு நடனம் இவருடைய உடலில் ஊறிப் போன விஷயமாகி விட்டது.

திரைப் படத்தைப் பொறுத்தவரை தயாரிப்பாளரும், டைரக்டரும், நடன டைரக்டர்களை அழைத்து படத்தில் இத்தனை நடனங்கள், இத்தனை பாட்டுக்கள் உள்ளன. அதற்கு நடனம் கம்போஸ் செய்ய வேண்டும் என்று கூறி விடுவார்களாம். பாடல் பதிவான பிறகு கேசட்டை கொடுத்து விடுகிறார்கள்.

இந்த இந்த வரிக்கு நாயகனோ, நாயகியோ இப்படி இப்படி மூவ்மெண்ட் கொடுக்க வேண்டுமென நடன டைரக்டர் நிச்சயிக்கிறார். ஹீரோ, ஹீரோயின் இடத்தில் உதவியாளர்களை வைத்து ஆடிப் பார்த்துத் திருத்தங்கள் செய்து ஒரு முழு ஒத்திகையுடன் ஷூட்டிங்குக்குச் செல்கிறார்கள். அங்கே இவர்களைப் பார்த்து நடிகர், நடிகைகள் ஆடுகிறார்கள்.

''பாத நாட்டியமெல்லாம் ஹீரோயின் சரியா ஆடறதில்லையேம்பாங்க. அந்தம்மாவுக்கு நடனம்னா என்னன்னே தெரியாத புதுமுகமா கூட இருக்கலாம். இப்படி இடுப்பை வளைச்சு, இப்படி கையை தூளைச்சுத் தூக்குன்னா வராது. கொடுத்த கால்



* நடிகர் பாண்டியராஜனுடன்.

## உடலிலிருந்து நீங்கள் உங்கள் குழந்தைக்கு அளித்த வைட்டமின்களின் குறையை நிரப்ப வேண்டிய சமயம் வரும்போது.

குழந்தைக்குத் தேவையான அனைத்து வைட்டமின்களையும் புரதங்களையும் அளித்து ஒன்பது மாதங்கள் உங்கள் உடல்தான் குழந்தையைக் காத்து பேணுகிறது. சில மாதங்களுக்குப் பிறகு குழந்தை திடமாகவும், நோயிலிருந்தும் தொற்று நோய்களிலிருந்தும் எதிர்த்து நின்று வளரவும் வைட்டமின்களும், தாதுக்களும் நிறைவான ஊட்ட மளிக்கத் தொடங்க வேண்டியுள்ளது.

சூப்புகளும், பழரசங்களும் கொடுப்பது ஒரு வழி இவற்றின் மூலம் இயற்கையான வைட்டமின்கள் கிடைப்பதோடின்றி, இவை எளிதில் மலம் கழிக்கவும் உதவும். சீக்கிரமே பழரசங்களும், சூப்புகளும் கொடுப்பதற்கு டாக்டர்கள் பரிந்துரை செய்கிறார்கள்.



மாரிஸன் பேபி ஃபீடரில் உங்கள் குழந்தை கடைசி சொட்டு வரை ருசித்துக் குடிக்கும் வகையில் டிசைன் செய்யப்பட்டுள்ளது. இது இறக்குமதி செய்யப்பட்ட பாலிகார்போனேட்டினாலானது. உடையாது, கீறல் விழாது. இது கண்ணாடிபோல் எப்போதும் சுத்தமாகத் திகழ்கிறது. இது நல்ல சூட்டையும் தாங்கிடும் திறன்வாய்ந்தது. இதை நன்றாக கொதிக்க செய்யலாம். இதன் முனைகள் உருண்டையாய் விளங்குவதால், விளிம்புகளில் அழுக்கு படியுமே என்ற கவலை இல்லை. இதன் நிப்பின் சரியான துவாரமுடையது - பெரியதுமில்லை, சிறியதுமில்லை. உங்கள் குழந்தைக்கு மிகச்சிறந்த தயாரிப்பையே வழங்க வேண்டும் என்பதற்காக மாரிஸன் மிகவும் அக்கறை எடுத்துக்கொள்கிறது.

# மாரிஸன்ஸ்®

பாலிகார்பொனேட் பேபி ஃபீடர்

**தாயை ஒத்த பாசமுடன் திகழுகிறது மாரிஸன்**

---

குழந்தை பராமரிப்பு பற்றிய **இலவச** சிறு புத்தகத்திற்கு எழுதுக:

J L MORISON (INDIA) LTD., 'Crystal' 79, Dr. Annie Besant Road, Worli, Bombay 400 018.

தினமலர்

# வாரமலர்

ஜன-1, '89 புத்தாண்டு சிறப்பிதழில்,



# புனிதன்

# ராஜேந்திரகுமார்



எழுதும்

இரு புதிய தொடர்கதைகள்

ஆரம்பம்!

**உங்கள் பிரதிக்கு இப்போதே**
**கடைக்காரரிடம் சொல்லி வையுங்கள்!**

ஒவ்வொரு ஞாயிறும், தினமலர் நாளிதழுடன் இணைந்து வரும் புத்தகம் வாரமலர்.

வீட்டுக்குள்ள ஷூட்டிங்கை முடிக்கணும். இல்லைன்னா தயாரிப்பாளருக்குத்தான் நஷ்டம். சரி, இந்த அளவுக்கு வளை போதும்னு நிறுத்திக்கிறோம். எல்லாமே அட்ஜஸ் பண்ணிக்க வேண்டியதுதான்...''

என்று சிரிக்கும் இவர், அட்ஜஸ்ட் பண்ணிக்காதது தன்னுடைய தனி வாழ்வில் மற்றவர் மூக்கை நுழைக்கும் போதுதான். நடிகர் ஸ்ரீ. சீனிவாசனை மணந்து கொண்டு, ஒரு பிள்ளைக்குத் தாயாக விளங்குகிறார். குடும்பம் வேறு வேலை வேறு என்பதில் சர்வ நிச்சயமாக இருக்கும் இவர், தன் குடும்ப வாழ்வில் முழுமையான இல்லத்தரசியாக இருக்கவே ஆசைப்படுகிறார்.

''நான் சம்பாதிப்பதெல்லாம் என் அமைதியான குடும்பத்திற்காகத்தான். என் வே...



என் வேலை என் குடும்ப அமைதிக்குப் பங்கமா வந்திச்சுன்னா நான் அதை அனுமதிக்கவே மாட்டேன். சினிமாவிலதானே இவ இருக்கான்னு என்னை யாரும் நெருங்க அனுமதிக்கறதில்லை. என் கீழே வேலையில இருக்கறவனை 'டா' போட்டுத்தான் அழைப்பேன். கன்னாபின்னான்னுதான் திட்டுவேன். அந்த அம்மா கண்டபடி பேசுவாங்கம்பாங்க. ஆமா, அந்தப் பேச்சையும், கண்டிப்பையும்தான் நான் என்னோட கவசமா வச்சுக்கிட்டு இருக்கேன். எனக்கு என் கணவரும், மகனும்தான் முக்கியம். அவங்களுடைய கௌரவமும், மரியாதையும்தான் முக்கியம். அவங்களைப் பார்த்து ஒருத்தர் ஒரு வார்த்தை சொல்லிடக் கூடாது. அதனால நான் நெருப்பாதான் பேசறேன். நடந்துக்கறேன்...

வீட்டுக்குப் போய்ட்டா பூஜை, சமையல், குடும்பத்தோட அளவளாவறது இதெல்லாம்தான் எனக்குப் பொழுது போக்கு'' என்கிறார்.

இப்போதுதான் இவருக்குள் இருக்கும் பெண்மையைப் புரிந்து கொள்ள முடிகிறது. கணவன், பிள்ளை, இவர்களோடு வேலையிலும் முழுமையாக ஈடுபட்டு அதில் முதல் ரேங்கிலும் இவரால் எப்படி நிற்க முடி

## அட்டை வண்ணப்படம்: 'ஜலராம் கம்பைன்ஸ்.'

கிறது?

''டான்ஸ்ல எனக்கு இருக்கற முழுமையான ஈடுபாடு என் கணவரும், பிள்ளையும் என்னை முழுமையா புரிஞ்சுக்கிட்டு இருக்கறது இது இரண்டும்தான் காரணம். என்னைப் போல நேரம், காலம் பார்க்காம வேலை செய்யறவங்களுக்கு முழுமையா புரிஞ்சுக்கிட்ட குடும்பம் இருக்கணும். என் கணவருடைய ஷூட்டிங், நடிப்பு இவற்றில் நான் தலையிடறதில்லை. அதே போல அவரும் என் வேலையில குறுக்கிடறதில்லை. மீதி இருக்கிற நேரத்துல ஒருத்தருக்கொருத்தர் திட்டமிட்டு குடும்ப வேலைகள்ள கவனம் செலுத்தறோம். இதனால எங்கேயும் தகராறு வர்றதில்லை.

அதே போல நடனத்துல எனக்கு ஒரு வெறியே இருக்குன்னு கூட சொல்லலாம். ஒரு தடவை ஜுரம் வந்து, ரொம்ப சீரியஸா போய் ஆஸ்பிடல்ல இருந்தேன். கால்ல நீர் இறங்கி ரெண்டு கால்லயும் பாண்டேஜ் போட்டிருந்தாங்க. அப்படியும் உதவியாளர்களை அழைச்சு, கையில சலைன் டியூபோட ஆடிக் காட்டி அங்கங்கே அனுப்பிச்சு ஷூட்டிங்கை நடத்தி வச்சேன். ஒரு ஷூட்டிங்கல நான் இருந்தே ஆகணும். நர்ஸம்மாக்குக் கொஞ்சம் பணத்தைக் கொடுத்து பின்னாடி வழியா போயிட்டேன்.

ஷூட்டிங்கல் உக்காந்துகிட்டே ஆடிக் காண்பிச்சேன். முடியறப்போ யாரையாவது பிடிச்சுக்கிட்டு நின்னுடுவேன். ஒரு வழியா முடிச்சுட்டு திரும்பி வந்தா ஆஸ்பத்திரி வாசல்ல டாக்டர்! பேயா கத்தினாங்க.

''உனக்கு என்ன பைத்தியமா? நீ பேஷண்டுன்னு நினைச்சியா, என்னன்னு நினைச்சே!



* டைரக்டர் குமாருடன்.

காய்ச்சல் நூத்திரெண்டுக்கு மேல ஏறுது! உள்ளே வராதே. அப்படியே போய் சாவு!"

கலகலவென்று சிரித்தார் சரோஜா. அப்படிக் கத்தி விட்டு அந்த டாக்டர் அதற்கப்புறம் ஒரு கைதியைப் போல தனக்குக் கட்டுக் காவலை அதிகரித்து வைத்தியம் செய்ததை புன்னகையோடு நினைவு கூறுகிறார்.

"பெண்களோடு நடனம் ரொம்ப சம்பந்தப்பட்டது. அதனால இந்தத் துறைக்கு இன்னும் நிறைய பேர் கூட வரலாம். ஆனா தனக்குக் கீழே பத்துப் பேரை வச்சு ஆட்டிப் படைக்கிற திறமை வேணும். தைரியம், தன்னம்பிக்கையெல்லாம் ரொம்ப தேவை. எல்லாத்துக்கும் மேல அதிர்ஷ்டம் இருக்கணும்.

இப்போ நான் நினைக்கிறேன், எனக்கு நல்ல புகழ் இருக்கு. படங்கள் இருக்குன்னு. ஒவ்வொரு படத்துலேயும் புதுமையா செய்யறேன். அறுவடை நாள்ல பிரபு ஆடற நடனங்களைப் பாராட்டாதவங்க இல்லே. தண்ணிக்குக் கீழே பல்புகளை எரிய விட்டு பிரபுவை டான்ஸ் ஆட வச்சேன். நல்ல வரவேற்பு. இப்போ புலியூர் சரோஜான்னா எல்லாருக்கும் தெரியும்.

இதுக்கெல்லாம் நான் முழுமையான காரணமா எனக்குத் தோணலை. எல்லாத்துக்கும் மேல ஒருத்தன் இருக்கான், அவன் நம்மையெல்லாம் வழி நடத்திச் செல்றான்னுதான் இருக்கேன்" என்கிறார்.

ஓயாத படப்பிடிப்பு, பத்து இருபதை பேரை அதட்டி வேலை வாங்குவது, ரிகர்சல், ரிகர்சல், ரிகர்சல் எனச் சலியாமல் ஓடுகிறாரே... ஏன் இந்தத் துறைக்கு வந்தோம்னு சலிப்பு என்றைக்காவது வந்திருக்குமா...

"ஓ... நிறைய தடவை. சரியா மூவ்மெண்ட்ஸ் கொடுக்காதவனையெல்லாம் கட்டி மேய்க்க வேண்டி இருக்கேன்னு 'ஓ'ன்னு கத்துவேன். இந்த மாதிரி மாஸ்டரா உங்ககிட்டே அவஸ்தைப்படறதை விட பேசாம வெத்தல பாக்கு கடை வச்சிருக்கலாம்ன்...னு கத்துவேன்.

ஆனா சொல்லுவாங்க, நீ செத்துப் போய் உன்னை எடுத்துக்கிட்டு போறப்ப கூட சும்மா படுத்திக்கிட்டு இருக்க மாட்டே... 'டண்டண்டக்கா' என மேளம் அடிச்சுக்கிட்டு ஆடறவன்கிட்டே, நீ எழுந்து "அடச்சே... இப்படி ஆடாதேடா.... 'டங்க டக்கா, டங்க டக்கா'ன்னு இப்படி மூவ்மெண்ட் வரணும்டா...ன்னு ஆடிக் காண்பிச்சுட்டு 'டக்'குன்னு படுத்துப்பே..." என்பார்கள்....

என்று அவர் ஆடிக் காட்டிய போது விழுந்து விழுந்து சிரித்தோம். உடம்பின், ஒவ்வொரு துளியிலும் அந்த அளவிற்கு அவருடைய வேலை ஊறிப் போய் இருக்கிறது. தொழிலில் தன்னையே மறந்து ஒரு வெறியோடு ஈடுபடும் இவரைப் பார்த்து பிரமிக்க வேண்டியதாகத்தான் இருக்கிறது!

— மஞ்சுளா ரமேஷ்

படங்கள்: யோகா

---



# நாம் செய்தால் தான் சாதனையா?

ஒவ்வொருவர் வாழ்க்கையிலும் மறக்க முடியாத சில நிகழ்ச்சிகள் நடக்கும். அந் நிகழ்ச்சி நம் தவறாலும் கூட ஏற்படலாம். அதுவே சிலசமயம் ஒரு சாதனைக்குத் தூண்டுதலாகக் கூட இருக்கலாம். அப்படித்தான் எனக்கு ஏற்பட்டது.

எனக்குக் கல்யாணம் ஆன போதுதான் பாங்கில் வேலை பார்த்துக் கொண்டிருந்தேன். என் கணவர் பெரிய கம்பெனி ஒன்றில் மானேஜராக இருந்தார். அவர் வசதியாக இருந்ததாலும், கொஞ்ச நாட்கள் கல்யாணமான புதிதில் வீட்டில் நிம்மதியாக இருந்து விட்டதாலும் மறுபடியும் லீவு முடிந்து வேலைக்குச் சேர மனம் வரவில்லை. இதை என் கணவரிடமும் சொன்னேன். அவரும் 'உனக்கு விருப்பம் இல்லை என்றால் விட்டுவிடு' என்றார். நானும் பத்து வருடங்கள் பாங்கில் சர்வீஸ் போட்டுவிட்டு வேலையை ராஜினாமாச் செய்து விட்டேன்.

கொஞ்ச நாட்கள் நிம்மதியாக ஓடிற்று. ஆனால் மற்றவர்கள் வேலைக்குப் போவதைப் பார்த்துப் பொறாமையாக இருந்தது. நாளடைவில் வேலையை விட்டது எவ்வளவு முட்டாள்தனம் என்று தோண ஆரம்பித்துப் பிற்பாடு அதுவே கவலையாகவும் மாறிவிட்டது. இதற்கிடையில் எனக்குக் குழந்தையும் பிறந்து ஏழு வருடங்களும் உருண்டோடி விட்டிருந்தன.

எனக்கும் என் கணவருக்கும் இதனால் அடிக்கடி சண்டையே வந்துவிட்டது. உங்களால்தான் என் வேலை போச்சு. இல்லாவிட்டால் நானும் மற்றவர்களைப் போல் ஜாலியாக வெளியே போய்ச் சம்பாதித்துக் கொண்டிருப்பேன். வீட்டில் உட்கார்ந்து எனக்கு போர் அடித்துப் போய்விட்டது என்று சொல்லிக் கொண்டிருந்ததோடல்லாமல் ஒரு வேலை மறுபடியும் வாங்கித் தரச் சொல்லி நச்சரித்துக் கொண்டிருந்தேன்.

என் தொந்தரவு தாங்காமல் அவர் ஒரு தாற்காலிக வேலையும் வாங்கிக் கொடுத்தார்.

காலை எட்டு மணிக்கு அரக்கப் பரக்க ஆபீஸ் கிளம்பிப் போய் மாலை ஆறு மணிக்குத்தான் வீடு திரும்ப முடிந்தது. வீட்டில் துணைக்கு வேறு யாரும் கிடையாது. உடல் கஷ்டத்துடன் மனக்கஷ்டம் வேறு. குழந்தை என்ன செய்கிறதோ, ஸ்கூலிலிருந்து வந்து சாப்பிட்டதோ என்பது போன்ற கவலைகள் பல என்னை வாட்ட நிம்மதி இழந்து கஷ்டப்பட்டேன். மூன்று மாதங்கள் இப்படி அல்லல் பட்டு ஒரு நாள் 'எனக்கு வேலையும் வேண்டாம், ஒன்றும் வேண்டாம். மனசுக்கு நிம்மதியும் இல்லை. நான் என்ன பண்ணறது' என்று கணவரிடம் சொல்லி வருத்தப்பட்டேன்.

அவர் சொன்னார்: "நீ வேலைக்குப் போய் வீட்டு வேலையையும் பார்த்துக் கொண்டு கஷ்டப்பட்டு நிம்மதி இழந்து தவிப்பதில் எந்த லாபமும் இல்லை. அதற்கு மாறாக ஒன்று செய். உன் திறமை வீணாகாமலும் அதே சமயம் கிடைக்கும் டயத்தை ஓர் ஆக்கபூர்வமான காரியத்துக்குச் செலவு பண்ணிப் பெரிய சாதனை பண்ண வேண்டும். அப்போதுதான் மனசுக்கும் நிம்மதி கிடைக்கும்" என்றார்.

எனக்கு அவர் என்ன சொல்கிறார் என்று புரியாததால், "கொஞ்சம் விளக்கமாகவே சொல்லுங்களேன்" என்றேன்.

"இதோ பாரு, நாம்தான் ஏதாவது சாதனை பண்ணணும் என்பதில்லை. நம் முயற்சியால் பிறரை ஒரு நல்ல நிலைக்குக் கொண்டு வர முடிந்தால் அதுகூட ஒரு சாதனைதான். உதாரணத்துக்கு நம் குழந்தையை ஏன் முன்னுக்குக் கொண்டு வர முடியாது? அதற்கு நல்ல முயற்சியை நாம் ஏன் இப்பவே எடுக்கக் கூடாது? நம் குழந்தைக்கு இப்போது ஏழு வயது ஆகிறது. அவளை ஏதாவது ஒரு விளையாட்டில் சேர்த்து ஒரு பெரிய விளையாட்டு வீராங்கனை ஆக்க முயற்சி செய்யேன்" என்றார்.

எனக்கும் அவர் சொல்வது சரி என்று தோன்றவே, மறுநாளே சில விளையாட்டு பயில்விக்கும் கிளப்களை அணுகி என் மகளைச் சேர்க்கும் பணியில் இறங்கினேன். பல விளையாட்டுகளுக்கு வசதியிருந்தும்

**இப்படி பயனுள்ள முறையில் சாதனைகளை நிகழ்த்தும் பெண்கள், தாங்களும் அவர்கள் அனுபவங்களை எழுதலாமே!**



எனக்கென்னவோ பெண் குழந்தையாத லால் டேபிள் டென்னிஸ் விளையாட்டு சரிப்பட்டு வரும் என்று தோன்றவே அதில் சேர்த்தேன்.

அவளுக்கு விளையாட வேண்டிய பாட், பால், ஷூஸ் போன்ற உபகரணங்கள் வாங்குவதிலும், அவளை கிளப்பிற்குக் கூட்டிச் சென்று அழைத்து வருவதிலும் என் பொழுதைக் கழித்தேன். அவள் ஓரளவுக்கு விளையாடத் தொடங்கியதும் பல இடங்களுக்கு மாட்ச் விளையாடக் கூட்டிச் சென்றேன். இப்படியாக நானும் ரொம்ப 'பிசி' ஆகிவிட்டேன்.

இப்படி மூன்று ஆண்டு விடா முயற்சியினால் என் மகள் இன்று தமிழ்நாட்டில் முதலாவதாகவும், அகில இந்தியாவில் நான்காவது இடத்திலேயும் 12 வயதுக்குட்பட்ட பிரிவில் அடைந்து விட்டாள்.

என் பழைய கவலை எல்லாம் பறந்து போயிற்று. என் குழந்தையின் வெற்றியில் எனக்கும் பங்கு உண்டு என்று நினைக்கும் போது ரொம்ப சந்தோஷமாக இருக்கிறேன்.

— திருமதி விஜயா கணபதி

---

## 'பில்'கள் பத்திரம்

எனக்குத் தெரிந்த பெண்மணி நகரின் பிரபலமான பெரிய கடையொன்றில் புதியதாக ஒரு புடைவை ரூ. 200/— விலையில் எடுத்து வந்தாள். எடுத்து இரண்டு மாதம் ஆகி நான்கைந்து முறை கட்டிய பிறகு வழக்கம் போல் சோப்புத் தூளில் நனைத்து வாஷ் பண்ணியிருக்கிறாள். சாயம் போவது போல் இருந்ததாம். சரி, சில துணிகள் முதல் வாஷிங்கில் சாயம் போகலாம். பிறகு, போகாது என இருந்து விட்டாள். பிறகு 2, 3 முறை துவைத்த பிறகு, டிஸைன் மறையும் அளவுக்குச் சாயம் போக உடன் கடைக்குச் சென்றாள். எப்படியென்றால் புடைவையின் மீது குத்தியிருக்கும் லேபிளுடன் கூடிய விலைப் பட்டியல் சீட்டு, மற்றும் புடைவையில் பில் இவற்றுடன், கடையில் சென்று காட்டி, உடன் வேறு புடைவை அதே விலையில் வாங்கி வந்து விட்டாள். அவள் புடைவையின் பில்லைப் பத்திரமாக வைத்திருந்ததால் நான்கு மாதம் கழித்துக் கூட, புதுப் புடைவை கிடைத்து விட்டது.

நம்மில் பலர் புடைவை லேபிள், பில் இவற்றை வீட்டுக்கு வந்தவுடனேயே கிழித்துத் தூரப் போடுபவர்களும் இருக்கிறார்கள். சகோதரிகளே, இப்பெண் போல் நீங்களும் புடைவை பில், மளிகை பில், நகை பில் மற்றும் நீங்கள் வாங்கும் எந்தப் பொருளின் பில் காரண்டி கார்டுகளையும் பத்திரமாக ஒரு தனி பையில் போட்டு பீரோவில் வைத்து விடுங்கள். சமயத்தில் தேவை ஏற்படும்.

தற்சமயம் விலைவாசி உயர்ந்தும், தரம் தாழ்ந்தும் உள்ள இக்காலத்தில் அவசியம் பில்களைப் பத்திரமாக வைத்திருப்பது முக்கியம்.

— பாலா.

**கா**லை நேர சிலுசிலுப்பான காற்று ஜில்லென்று முகத்தில் மோத பஸ் விரைந்து கொண்டிருந்தது. காலை வேளையாகையால் பஸ்ஸில் மொத்தமே பத்துப் பேர்தான் இருந்தோம்.

இருபுறமும் பச்சை வயல் சேலை கட்டிக் கொண்டிருக்கும் பூமிமாதா. அவளின் கார் குழலாய் தார் பூசிய சாலை உள்ளது. வளைந்து சென்று கொண்டிருந்தது.

எவ்வளவு நாட்களாகி விட்டன நான் இதுபோன்ற மனதுக்கு இதமான சூழ்நிலையில் லயித்து...?

காலையில் எழுந்தவுடன் சமையல், குழந்தை, கணவர், ஆபீஸ் என்று வேலைக்குச் செல்லும் இல்லத்தரசிக்கே உரிய பொறுப்புடன் பம்பரமாய் சுழன்று கொண்டிருக்கும் என் வாழ்க்கைச் சக்கரத்தில் ஒரு மாறுதலான காலைப் பொழுது.

இன்னும் ஒரு மணி நேரப் பயணத்தில் நான் பிறந்து, வளர்ந்த ஊர் வந்து விடும்.

ஊரைப் பற்றிய நினைப்பு வந்தவுடன் மணியோசைக்குப் பின் வரும் யானையாய் அம்மாவின் நினைவுகள் வந்தன.

இப்போது அம்மா மட்டும் அங்கு பாவம் தனியாக வசித்து வருகிறாள்.

அம்மாவை நினைத்தவுடன் சங்கிலித் தொடராய் நேற்று என் கணவர் பேசியது ஞாபகம் வந்தது.

"என்ன பானு, கை வேலையாய் இருக்கியா?"

வெண்டைக்காயை இரவுச் சமையலுக்கு நறுக்கிக் கொண்டிருந்த என்னைப் பார்த்து என் கணவர் அப்படிக் கேட்டவுடன் சிரிப்பு வந்தது.

"என்னங்க விஷயம்?"

"உங்க அம்மாவை ஏன் ஒரு ரெண்டு மாசமா இந்தப் பக்கமே காணோம்?"

அம்மாவைப் பற்றிய அவர் விசாரிப்பு எனக்கு சந்தோஷத்தைத் தந்தது.

"பாவம் வயசான காலத்துல தனியா அங்கே அவங்க இருக்கறதை நினைச்சா மனசுக்குக் கஷ்டமா இருக்கு" என்று அவர் மேலும் சொன்னார்.

உண்மைதான். என் அம்மாவிற்கு நான் ஒரே பெண். அப்பாவும் காலமாகி, நானும் திருமணமாகி இங்கு வந்தவுடன் தனிமையின் கொடுமையில் உழல்கிறாள் பாவம்.

"என்னங்க பண்றது. அம்மா இங்கே வந்தும் இருக்க மறுக்கறாங்க. கோட்டாசப் பத்தி வீட்ல தங்கக்கூடாதுன்னு சொல்லிட றாங்க. சரி அதை விடுங்க. நாளைக்கு ஞாயிற்றுக் கிழமைதானே கான்ட்ராக்டரைப் போய்ப் பாருங்க. ரொம்ப படிலே பண்றார். வீட்டை கட்டினோமா. குடிபோனோமா



மான்னு இல்லாம இழுத்துக்கிட்டே போகுது'' என்றேன்.

இங்கு, இதே ஊரில்தான் வீடு ஒன்று கட்டிக் கொண்டிருக்கிறோம். தொண்ணூறு சதவீதம் கட்டி முடித்தாகி விட்டது. கடைசி சில வேலைகள்தான் பாக்கி.

"இதற்கு அவரை மட்டும் நாம குற்றம் சொல்ல முடியாது பானு. நாமும் ஒரு ஆறாயிரம் ரூபாய் பாலன்ஸ் தர வேண்டியுள்ளது. அதைக் கொடுத்துட்டா காண்ட்ராக்டர் பைனல் டச்சப் முடிச்சுடுவாரு'' என்று என் கணவர் சொன்னவுடன் திகைத்தேன்.

"ஐயாயிரம், ஆறாயிரம்னு சொல்றீங்க, நம்மகிட்டே ஏதுங்க இப்ப அவ்வளவு பணம்? அங்கே, இங்கே கடன் வாங்கி ஏதோ ஓரளவு கட்டி முடிக்கற ஸ்டேஜுக்கு வந்துட்டோம். இப்ப இந்தப் பணத்துக்கு நாம எங்கே போறது?''

"அதுக்குத்தான் ஒரு வழி நான் யோசிச்சு வைச்சிருக்கேன பானு'' என்றவரை கேள்விக்குறியோடு பார்த்தேன்.

"உங்கம்மா ஏழாயிரம் ரூபாய் பேங்க்குல சேமிச்சு வைச்சிருக்காங்கன்னு சொன்னியே, அதை வேணா கடனா கேட்டுப் பார்க்கலாமே?''

"அது எப்படிங்க? அந்தப் பணத்துக்கு பாங்க் கொடுக்கற வட்டியிலதான் அவங்க ஜீவனமே நடக்குது.''

நான் சொன்னதைக் கேட்டு சிறிது நேரம் யோசித்தவர், "நீ சொல்றது உண்மைதான். இப்படி செஞ்சிடலாமே, அந்த வட்டிப் பணத்தை நாம கொடுத்துடுவோம். வெளியில கடன்னு போனா அஞ்சு வட்டிங்க றாங்க. அதனாலதான் இந்த ஐடியா. எப்படிப் பார்த்தாலும் உங்கம்மாவுக்குப் பிறகு அந்தப் பணம் உனக்குத்தானே வரப் போகுது. இப்ப அதுல ஒரு சின்ன அட்ஜஸ்ட்மெண்ட்''

அவர் யோசனையும் சரியென்று படவே அம்மாவைப் பார்க்க இப்போது போய்க் கொண்டிருக்கிறேன்.

"வா பானு! என்ன நீ மட்டும் தனியா வந்திருக்கே? மாப்பிள்ளை, குழந்தைகள் லாம் எப்படி இருக்காங்க?'' என்று வரவேற்ற அம்மாவைப் பார்த்தேன்.

எப்போதும் போல் பளிச்சென்ற முகம். வயது தந்த சுருக்கங்கள். ஒடிசலான தேகம். தனிமையின் களைப்பு முகத்தில் அப்பட்டமாகத் தெரிந்தது.

"நீ எப்படிம்மா இருக்கே?'' என்று கேட்டபடி அம்மாவின் கையைப் பாசத்துடன் பற்றினேன்.

"அதான் பார்க்கறியே? அது சரி குழந்தைகளையாவது கூட்டிட்டு வந்திருக்கலாமே?''

"ரெண்டு பேருக்குமே பரீட்சை நடந்துண்டு இருக்கும்மா. அதனாலதான் வரலை''

அப்போது யதேச்சையாக சுவரோரம் பார்த்த போதுதான் பக்கத்து வீட்டு ராமசாமி மாமாவைப் பார்த்தேன்.

"அடேஅட, என்ன மாமா சௌக்கியமா? உங்க பையன் ரகு எப்படி இருக்கான்? நீங்க இப்ப அவனோடதானே இருக்கீங்க?'' என்று விசாரித்தேன். அவர் பையன் ரகு என் ஸ்கூல்மேட்.

"இல்லைம்மா. ஏனோ ஒத்து வரலை. அதனாலே சொந்த இடமே சொர்க்கம்னு இங்கேயே நானும், அவளும் வந்துட்டோம். அதைப் பற்றி நானும், உங்கம்மாவும் பேசிண்டு இருக்கும் போதுதான் நீ வந்தே'' என்று நொந்த குரலில் சொன்னார்.

"காபி சாப்பிடுறியா பானு? காலையில வெறும் வயித்தோடதானே புறப்பட்டுருப்பே?''— அம்மா வாஞ்சையுடன் கேட்டாள் நடுவில் புகுந்து.

"நீ சிரமப்படாதேம்மா. மாமாவோட பேசிண்டு இரு. நானே எனக்கும், உங்களுக்கும் சேர்த்து கலந்து எடுத்துக்கிட்டு வரேன்'' என்று சொல்லியபடி கைப்பையை மேஜை மேல் வைத்து விட்டு சமையலடியினுள் புகுந்தேன்.

ம்... சொல்லுங்க மாமா? என்று அம்மாவின் குரலும், தொடர்ந்து ராமசாமி மாமாவின் குரலும் கேட்டது.

"சரி, இனிமேல் அங்கே இருந்தா உள்ள மரியாதையும் போயிடும்னு நானும், மாமியும் புறப்பட்டு நேரா நம்ம ஊருக்கே வந்துட்டோம். கல்யாணம் ஆகற வரைதான் பிள்ளை, பொண்ணெல்லாம் அதுக்கப்புறம் அவா வேற, நாம வேறதான்''

"முன்னெல்லாம் ரகுவும், உங்க மருமகளும் நல்லபடியாத்தானே உங்களை கவனிச்சாங்க. திடீர்னு ஏன் இப்படி குணம் கெட்டு நடந்துக்கறாங்க?''

'பொரி பொரி பொரி' மிக்ஸர்)
(முப்பொரி மிக்ஸர்)

ஜவ்வரிசியை 1 கப் எடுத்துச் சிறிதளவு சிறிதளவாக நெய்யில் பொறிக்கவும். (பெரிய ஜவ்வரிசி நன்றாக இருக்கும்).

அரிசிப் பொரி — 1 கப்,
அவல் பொரி — 1 கப்,
பொரித்த ஜவ்வரிசி — 1 கப்,
நிலக்கடலை (தோல் நீக்கியது),
முந்திரிப் பருப்பு—வறுத்தது கொஞ்சம்.

மூன்று பொரிகளையும் மிளகாய்த் தூள், உப்புத் தூள் போட்டுக் கலந்து நிலக்கடலை, முந்திரியுடன் கறிவேப்பிலை பொறித்துப் போட்டுக் கலக்கவும். கலப முறை. சிறந்த டேஸ்ட்! மார்கழி நாக்கு வரவேற்கும்!

— எஸ்ஸார்.

ஈஸி கலர்

ECtv

அசல் மதிப்பு...
காலத்தோடு உரமேறும் மதிப்பு.

ECtv


எலக்ட்ரானிக்ஸ் கார்ப்பரேஷன் ஆஃப் இந்தியா லிமிடெட்
(இந்திய அரசு நிறுவனம்), ஹைதராபாத் 500 762.

Karishma/EC/126/2517

## உங்கள் மகள் கேம்பில் கற்ற புதிய பாடம்-'உஷாராக இருங்கள்.' நீங்களும் பேன்களை எதிர்க்க உஷாராக இருக்கிறீர்களா?



# பேன் பிரச்சினையை பாதுகாப்பாகவும், நிச்சயமாகவும் தீர்த்திடுங்கள். தேர்ந்தெடுங்கள் மெடிக்கர்.

மெடிக்கர்— நன்கு ஆராய்ச்சி செய்து தயாரிக்கப்பட்ட பேன்-கொல்லி மருந்தாகும். இது உங்கள் மகளின் கேசத்தை மென்மையாக பாதுகாக்கிறது. மெடிக்கர் ஆற்றல் மிக்கது. பாதுகாப்பானது. பேன்களை முற்றிலும் ஒழிக்கிறது.

**6 நிமிடங்களில், ஆரோக்கியமான, சுத்தமான பேன்கள் அற்ற கேசம்.**

மெடிக்கர், ஷாம்புவைப் போன்றதால் உபயோகிப்பது எளிது.

1. உங்கள் குழந்தையின் கேசத்தை நீரில் அலசுங்கள். 1/2 பேக்கட் அல்லது மூடி நிறைய மெடிக்கரை கேசத்தில் ஊற்றுங்கள்.
2. மெடிக்கரை, தலையில் 3 நிமிடங்களுக்கு நன்கு நுரை வரும் வரை தேய்க்கவும்.
3. கேசத்தை அலசியபின் மீண்டும் அதே போன்று (குறிப்பு 1 மற்றும் 2) மீதமுள்ள 1/2 பேக்கட் அல்லது மூடி நிறைய மெடிக்கரை உபயோகிக்கவும்.

மெடிக்கர் பேன்களை ஒழிப்பதோடு மட்டுமின்றி உங்கள் கேசத்தை ஆரோக்கியமாகவும் சுத்தமாகவும் திகழச் செய்கிறது.

# மெடிக்கர்

பேன்களிலிருந்து உங்களைக் காக்கும் பாதுகாவலன்.

எளிதானது. பாதுகாப்பானது. ஆற்றல் மிக்கது.






everest/87/RHL/549 tm A

வழங்குவோர் : ப்ராக்டர் அண்ட் கேம்பிள் இந்தியா லிமிடெட் – விக்ஸ் மற்றும் கிளியரசிலின் தயாரிப்போர்.

''அதுலேயும் ஒரு படிப்பினை எனக்கு. ரிடையர் ஆனவுடனே பிள்ளை வந்து ஆசையா கூப்பிடறானேன்னுதான் போனேன். ஒரு ஆறு மாசம் நிம்மதியாத் தான் பொழுது கழிஞ்சது. அவன், மச்சின னோட சேர்ந்து ஏதோ பிசினஸ் பண்ணப் போறேன்னு சொல்லி என் ரிடையர்மென் டுல கிடைச்ச பணத்தைக் கேட்டான். பிள்ளை கேட்கறானேன்னு நானும் கொடுத் துட்டேன். அப்புறம் கொஞ்ச நாள்லதான் இந்த மாதிரி அவமரியாதையெல்லாம் கிடைக்க ஆரம்பிச்சது''

''அப்படியா அடராமா!''

''ஒண்ணு மட்டும் உண்மை. கையில நாலு காசு இருக்கற வரைக்கும்தான் நமக்கு மதிப்பு. அது சொந்தப் புள்ளையாகவே இருந்தாலும் நாம அவங்களை அண்டி வாழற நிலைமை வந்துடுத்துன்னா அடுத்த நம்ம மானம், மரியாதையெல்லாம் அவ் வளவுதான்''

டிகாஷனை டம்ளரில் ஊற்றியபடியே அவர்கள் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்த எனக்கு அவர் மேல் இரக்கம் ஏற்பட்டது.

''தாயும், பிள்ளையும் ஒண்ணுன்னாலும், வாயும், வயிறும் வேறங்கறது உண்மைதான் போல இருக்கு? இப்ப பணத்தை திருப்பிக் கேட்க வேண்டியதுதானே மாமா?'' என்று அம்மா கேட்டது காதில் விழ அவர் பதிலைக் கேட்க ஆவலானேன்.

''அது எப்படிம்மா முடியும்? யாராவது அசல் ஆளுக்கா கொடுத்திருக்கேன். பிள் ளைப் பாசம் வேற வந்து குறுக்கே நிக்கறது. அவனும் மாசா மாசம் ஒரு தொகையை வட்டி மாதிரி தருவதாகத்தான் சொன்னான். ஆனால் அவனும் ரெகுலரா கொடுக்கற தில்லை, நானும் கேட்க முடியலை. அப்ப டியே கேட்டோம்னா, சொந்தப் புள்ளை கிட்டயே வட்டி கேட்கறான் பாருன்னு பொல்லாப்புதான் மிஞ்சும். ம்...! ஈஸ்வரன் இருக்கான். நடக்கறபடி நடக்கட்டும்'' என்று அவர் பெருமூச்சு விடுவது தெரிந் தது.

அவர் பேச்சு என் மனதில் நறுக்கென்று பதிந்தது.

என் அம்மாவின் நிலையும் நாளை இது போல் ஆகாது என்பது என்ன நிச்சயம்..?

மனிதர்கள் அனைவரும் ஒருவகையில் பார்த்தால் சுயநலக்காரர்கள்தானே.

பணமும் வராமல், அம்மா சாப்பாட் டுக்கே இந்தத் தள்ளாத வயதில் கஷ்டப்படு வதை நினைத்துப் பார்க்கவே மனம் சங் கடப்பட்டது.

கூடாது. என் அம்மாவுக்கு இந்த நிலைமை வரக் கூடாது. நான் வர விடவும் மாட்டேன்.

என் கணவரிடம் பொருத்தமாக என்ன பொய் சொல்லலாம் என்று யோசித்த படியே கையில் காபி டம்ளருடன் ஹாலி னுள் நுழைந்தேன்.

# மகளிர் சங்கங்கள்




## சென்னை:

தியாகராய நகர், ஐஸ்வரியா மாதர் சங்கத்தின் ஐந்தாவது ஆண்டு விழா 25.11.88 அன்று சிறப்பாக நடைபெற்றது. சங்கத்தில் முதல் முறையாகச் சிறப்புமலர் வெளியிடப்பட்டது. ஜி. கே. கரியாலி, டாக்டர் பத்மாவதி, டாக்டர் எம். எஸ். உதயமூர்த்தி ஆகியோர் வந்திருந்தார்கள். டாக்டர் எம். எஸ். உதயமூர்த்தி அவர்கள் பெண்கள் முன்னேற்றம் பற்றி மிக அழகாகப் பேசி மகிழ்வித்தார். சிறப்பு மலரில் வெளிவந்த விளம்பரங்கள் மூலம் கிடைத்த வருமானத்தில் விஷ்ராந்திக்காக ஒரு மின்விசிறியும், ராமகிருஷ்ணா பள்ளி, (தியாகராயநகர்) குழந்தைகள் படிப்பிற்காக ரூ. 1001/–ம், வெள்ள நிவாரணத்திற்காக அகில இந்திய பெண்கள் சங்கத்திற்கு ரூ. 501/– ம் நிதியுதவி அளிக்கப்பட்டது.

மலர் வெளிவருவதில் பெரும் பங்கு வகித்த அங்கத்தினர் திருமதி பார்வதி ராமசாமிக்கு நன்றி கூறப்பட்டது.

கல்யாணி நடராஜன், தலைவி.
பானுமதி ராமச்சந்திரன், செயலர்.

சென்னைத் துறைமுகக் குடியிருப்பு ஊழியர் நலமன்றத்தின் மகளிர் பகுதி திறப்பு விழா இவ்வாண்டு 27.3.88 அன்று நடைபெற்றது. ஏறக்குறைய 1000 குடியிருப்புக்களை கொண்ட ஒரு காலனியில் இம்மன்றம் செயல்படத் துவங்கியது. சென்னைத் துறைமுகப் பேரதிபர் திரு. ஏ. பால்ராஜ் ஐ. ஏ. எஸ். அவர்களின் துணைவியார் திருமதி ரேணுகா அவர்கள் இம்மன்றத்தினைத் துவக்கி வைத்தார்.

எங்கள் மன்றத்திற்காக துறைமுக நிர்வாகத்தினரால் அளிக்கப்பட்ட கட்டிடத்தில் திறந்து வைத்தார். அதில் ஊழியர்களின் குடும்பப் பெண்களுக்காக ஒரு நூலகமும், டீ.வி.யும், குழந்தைகளுக்கான விளையாட்டு சாதனங்களும் அமைக்கப்பட்டுள்ளது. அன்று துறைமுகப் பேரதிபர் திரு. ஏ. பால்ராஜ் ஐ. ஏ. எஸ். அவர்களும் வந்திருந்து சிறப்பித்தார்.

தலைவி, பங்கஜம் சுந்தரராஜன்.
செயலர்: குமாரி நிர்மலா.

## திருச்சி:

எங்கள் சாலைநகர் மாதர் சங்கத்தின் மூன்றாம் ஆண்டு தொடக்கத்திலிருந்தே பரபரப்பு. எதையாவது சாதிக்க வேண்டும் என்ற ஆர்வம், நல்ல பல பணிகளைப் பிற

ருக்கு உபயோகமாகச் செய்துவிட்டு, அந்தச் சாதனையின் பெருமையுடன், ஆண்டு விழாவை நடத்த வேண்டும் என்று அங்கத்தினர் ஒவ்வொருவருக்கும் அடக்க முடியாத ஆவல்.

இலவச மருத்துவ முகாம் நடத்த வேண்டும் என்ற ஆவல் பிறந்தது. எங்கள் பகுதியைச் சுற்றி வசதியற்ற ஏழை மக்கள் அதிகம் வசிக்கிறார்கள். மருந்துகள் சேகரித்தோம். ஒருவர் சீட்டுக்களைக் கொடுத்தனுப்ப, ஒருவர் எடை பார்க்க, ஒருவர் நோயாளிகளை விரைவாக அனுப்ப, ஒருவர் மருத்துவர் அருகில் உதவியாக இருக்க, நான்கு பேர் மருந்து விநியோகிக்க மருத்துவ முகாம் களைகட்டத் தொடங்கியது. ஒரு மணிநேரத்தில்வெளியேநூறுபேர்நோயாளிகள் கூடிவிட்டனர்.

மாலை ஐந்து மணி வரை நானூறு பேர்கள் மருந்து வாங்கிப் பயன் பெற்றனர். முதல் முயற்சியே படுவெற்றி. தொடர்ச்சியாக மருத்துவ முகாம்கள் நடத்தி வருகிறோம். அதேபோல இலவசத் திருமணங்களும் நடத்தி வருகிறோம்.

தலைவர், கோமதி உலகநாதன்.
செயலர், பத்மாதுரை.

**தென்னூர்:**

''மகளிர் நுகர் பொருள் கொள் முதல் குழு'' என்ற அமைப்பை ஏற்படுத்தி சிந்தாமணி சிறப்பங்காடியிடம் இருந்து பொருட்களை வரவழைத்து எங்கள் அண்ணா நகர்ப் பகுதி மக்களின் வீடுகளில் விநியோகம் செய்து இந்தியாவிலேயே முதன் முதலாக இத்திட்டத்தினை ஆரம்பித்து, சென்ற நான்கு வருடமாக நடத்தி வருகிறோம் என்பதைப் பெருமையுடன் கூறிக் கொள்கிறோம்.







''மற்றும் எங்கள் மகளிர் மன்றம் திருச்சியில் உள்ள விழி இழந்தோர் பள்ளிக் குழந்தைகளுக்குப் பல முறை உணவளித்தும், மற்றும் அவர்கள் தயாரிக்கும் பொருட்களை விற்றுக் கொடுத்தும் அவர்களுக்கு உதவுகிறோம். சென்ற வருடம் இரண்டு ஏழைத் தம்பதிகளுக்கு இலவசத் திருமணம் செய்து வைத்துள்ளோம்.

இந்த வருடத்திய தலைவி, திருமதி செல்லம்மா,
செயலாளர், திருமதி உமா.

# குழந்தைகளின் சில குறைகள்...



மூன்று வயதுக் குழந்தை ராதா பால் குடித்துக் கொண்டிருந்தாள். பால் குடித்து முடிப்பதற்குள் சட்டையில் எல்லாம் ஊற்றிக் கொண்டாள்.

"அன்பு ராதா, நீ ஒரு நாளாவது பாலை மேலே கொட்டிக் கொள்ளாமல் குடிக்கிறியா?" — அவளது தாயின் புலம்பல்.

ராஜேஷ் ஸ்கூலில் இருந்து திரும்பி வருகிறான். வயது நான்கு. அவனது முழுங்காலில் அடிபட்டு ரத்தம் கசிந்து கொண்டிருக்கிறது. அவனை வரவேற்ற தாய் அருகில் நின்று கொண்டிருந்த அடுத்த வீட்டு மாமியிடம் சொல்கிறாள்.

"எங்க ராஜேஷ் ஒரு நாளாவது ஸ்கூலில் இருந்து உருப்படியா திரும்ப மாட்டான். நேற்றைக்கு முழங்கையிலே அடி... இன்னைக்கு முழங்காலை பேத்துக்கிட்டு வந்திருக்கான்.... நாளைக்கு எங்கே அடிப்பட்டுக் கொண்டு வருவானோ.... மாசந்தோறும் பிளாஸ்திரி வாங்கறதுக்குன்னே அம்பது ரூபா வைக்கணும்."

தனது மகன் பிரகாஷை (வயது 5) அழைத்துக் கொண்டு ஏதாவது விருந்திற்கு அழைத்துச் செல்ல அவனது பெற்றோர்களுக்குப் பயம். காரணம் எந்த ஒரு விருந்திற்கும் அவன் சென்று அவன் எதையாவது உடைக்காமல் வந்ததில்லை. இதனாலேயே அவர்கள் அவனை அழைத்துக் கொண்டு விருந்திற்குப் போவதைத் தவிர்த்து விடுகிறார்கள்.

இது போன்ற குழந்தைகளை பல வீடுகளிலும் காணலாம். இந்த மாதிரி குழந்தைகள் இதுமாதிரி நடந்து கொள்வதற்குப் பெரும்பாலும் பெற்றோர்கள் சொல்லும் காரணம், "அவனு(ளு)க்குளதிலும் அலட்சியம். கவனம் கிடையாது" என்று சாதாரணமாகச் சொல்லி சமாதானம் அடைந்து விடுகிறார்கள். ஆனால் அவர்கள் சொல்லும் காரணம் உண்மையானதல்ல.

இந்தக் குழந்தைகளுக்கு உடல் உறுப்புகளின் அசைவுகளை வேண்டிய நேரத்தில் வேண்டிய தூரத்தில் வேண்டிய அளவு இயக்குவதில் (Co-ordination of muscles) குறைபாடு இருக்கிறது. அவர்களுடைய நடத்தைகளுக்கு இந்த குறைபாடே காரணம். பல

பெற்றோர்களுக்கும் இப்படி ஒரு குறைபாடு தன் குழந்தைக்கு இருக்கிறது என்பது தெரிவதில்லை. அந்தக் குறைபாட்டை நீக்க எந்த விதமான முயற்சியும் எடுத்துக் கொள்ளாமல் அப்படியே வளர்ந்து வரும் குழந்தை, பிற்காலத்திலும் தான் செய்யும் காரியங்களை ஒழுங்காக செய்ய முடிவதில்லை.

உதாரணமாக பாக்டரியில் வேலை செய்யும் ராகவன் —

இவர் வேலை செய்யும் பிரிவில் வேலை செய்யும் போது உடைந்து போகும் என்ஜினியரிங் டூல்ஸ்களின் எண்ணிக்கை மிக அதிகம். இவரிடம் ஒரு பார்ட்டைக் கொடுத்து ரிப்பேர் செய்து கொண்டு வரச் சொன்னால் அது செய்து வரும் போது உபயோகமற்றதாகத்தான் வரும். இதற்கெல்லாம் அடிப்படைக் காரணம் சிறு வயதில் இவருக்கு ஏற்பட்ட 'கோ—ஆர்டினேஷன்' பிரச்னையே.

இது போல பிரச்சனைகள் உலகத்தில் பத்து குழந்தைகளில் ஒரு குழந்தையிடம் காணப்படுவதாக ஆராய்ச்சியாளர்கள் தெரிவிக்கிறார்கள்.

இந்த மாதிரிக் குழந்தைகள் கூட்டாக சேர்ந்து விளையாடுவதைத் தவிர்க்கின்றன. உதாரணமாக பந்தைப் பிடித்து விளையாடும் விளையாட்டாக இருந்தால் எங்கே தங்களால் ஒழுங்காக பந்தைப் பிடித்து எறிய முடியாதோ என்ற பயத்தினால் விளையாட்டில் கலந்துக் கொள்வதை தவிர்க்கிறார்கள். இவர்களுடைய கையெழுத்து மிக மோசமாக இருக்கும். பேனா பிடித்து எழுதுவது என்பது இவர்களுக்கு என்னவோ இமய மலையில் ஏறி எதையோ சாதிப்பது போலிருக்கும்.

மேற்கூறிய குறைகள் எல்லாம் ஏழெட்டு வயதிற்கு மேலும் தொடர்ந்து காணப்பட்டால் அந்தக் குறிப்பிட்ட குழந்தைக்கு 'கோ—ஆர்டினேஷன்' பிரச்சனை இருக்கிறது என்று அர்த்தம்.

இந்தத் துறையில் புரபஸர் ஜூடித் லாஸ்லோ (**Professor Judith Lazlo**) என்பவர் இருபது வருடங்களாக ஆராய்ச்சி செய்து வருகிறார். இவர் சொல்லும் யோசனைகளாவது:

"இந்த மாதிரி குறை உள்ள குழந்தைகள் மூளை வளர்ச்சி குறைபாடு உள்ளவர்கள் இல்லை. இந்த மாதிரி குறைகள் ஏற்படுவதற்குப் பெரும்பாலும் அந்தக் குழந்தைகள் தனித்து வளருவதும் — யாராலும் தூக்கி அணைத்து கொஞ்சி வளர்க்கப்படாத நிலை — அதிக கூச்ச சுபாவம் உள்ளதாக இருப்பதும், தன்னைப் பற்றிய உயர்ந்த அபிப்பிராயம் இருப்பதும் சில காரணங்கள்.

கண்களில் குறை இருந்தால் கண்ணாடி போட்டு சரியாக்குவது போல் உடல் உறுப்புகளின் இயக்கத்தில் குறைபாடுகள் இருந்தால் பயிற்சி மூலம் அதைச் சரிப்படுத்தலாம். பயிற்சிகள் கண்ணாடியைப் போல என்கிறார் இவர்.

இந்தக் குறை நீங்குவதற்குத் தேவையான பயிற்சிகளை வீட்டில் இருந்தே கொடுக்கலாம்.

ரயில் பாதையின் மீது ஓடும் விளையாட்டு டிரெயின் — திறந்த பெட்டிகளில் பயணிகள் உட்கார்ந்திருக்கிறார்கள். டிரெயினை வேகமாகவோ, மெதுவாகவோ ஓடச் செய்து பயணிகளை பெட்டிகளில் இருந்து எடுக்கவோ பெட்டிகளில் வைக்கவோ சொல்லலாம். இதனால் அவர்களது உடல் உறுப்புக்களின் அசைவுகளை தகுந்த அளவு உபயோகப்படுத்த பயிற்சி கிடைக்கிறது. கொடுத்து ஓடும் ரயில், எலிகாப்டரை குறிப்பிட்ட தூரத்தில் ஓடி எடுக்கச் சொல்லலாம். சறுக்கு மரத்தின் வழியாக பந்துக்களை உருட்டி குறிப்பிட்ட உயரத்தில் பந்துகளைப் பிடிக்கச் சொல்லி பயிற்சி தரலாம்.

பலவித சைஸ்களில் உள்ள பந்துகளை குறிப்பிட்ட சைஸ் பந்து உள்ள பெட்டிகளில் எறியச் சொல்லலாம். நீளமான கோட்டுக்களில் பட்டன்களை போடச் சொல்லி கழற்றச் சொல்லி பயிற்சி தரலாம். பூங்காக்களில் வேகமாக ஓடச் சொல்லி பயிற்சி தரலாம். இதுபோன்று எத்தனையோ பயிற்சிகள் தரலாம்.

இதெல்லாம் சிறிய எளிமையான பயிற்சிகள் போல் தோன்றும். குறைபாடுகள் உள்ள குழந்தைகளுக்கு தங்களுடைய குறைபாடுகளை அறவே போக்கவும் அல்லது முடிந்த அளவு குறைக்கவும் இந்தப் பயிற்சிகள் உதவும்.

ஆனால் கவனிக்க வேண்டிய சில விஷயங்கள்:

குழந்தைகள் விருப்பப்படாத எதையும் வலுக்கட்டாயமாகத் திணிக்கக் கூடாது. குழந்தைகள் இந்தப் பயிற்சிகளை பயிற்சிகளாக எண்ணாமல் விளையாட்டுக்கள் மாதிரி நினைக்கும் சூழ்நிலையை உருவாக்க வேண்டும். அவர்கள் அந்த பயிற்சிகளை நல்ல முறையில் செய்தால் அவர்களைப் பாராட்ட வேண்டும். பாராட்டு மிகச் சிறந்த டானிக்.

பயிற்சிகளின் போது எப்போதாவது எதையாவது தவறுதலாக கீழே போட்டு விட்டாலோ உடைத்து விட்டாலோ ஆத்திரப்படாதீர்கள். அவர்கள் வேண்டுமென்று அதைச் செய்யவில்லை.

— கமலநாதன்.

என்னுடைய கணவரிடம் ஒரு நல்ல குணம், தன்னுடைய சாப்பாட்டுத் தட்டை தானே கழுவி விடுவார். இதைப் பார்த்து என்னுடைய பிள்ளை இனிப்பும், சாப்பாட்டுத் தட்டை, சாப்பிட்ட பின் சிரத்தையுடன் கழுவி வைத்து விடுவான். அதுவும் குறிப்பாக, உறவினர்கள் மற்றும் நண்பர்கள் வீட்டிற்குச் சென்று தட்டில் சாப்பிடும் போதும், சாப்பிட்ட பின் சிரத்தையுடன் அவற்றைக் கழுவி வைத்து விடுவான். அவன் அப்படிச் செய்யும் போது உறவினர்கள் பாராட்டும் போது எனக்கு மிகவும் பெருமையாக இருக்கும்.

— ராஜிராதா.

---



குறுநாவல்

# தளைகள்

-ஆர்.கே.பத்மா

## 1

அந்தச் சிறிய ரயில்வே ஸ்டேஷனில் கலாவதியை வழியனுப்ப வந்த ஏழு பேர் கூட்டம் மாதிரித் தெரிந்தது.

ஒரு சிறிய ஹோல்டால், சூட்கேஸ், தோளில் கைப்பையோடு நின்றிருந்த கலாவதியை அம்மாவும், பெரியம்மாவும் ஆளுக்கொரு பக்கமாகப் பிடித்துக் கொண்டிருந்தார்கள்.

வாயில் புடவையும், சாந்துப்பொட்டும், ரிப்பன் வைத்த பின்னலுமாய் இருபத்தியோரு வயதுப் பெண்ணை உத்தியாக நிமித்தம் தனியாய் அனுப்புவது அம்மாவைக் கஷ்டப் படுத்திக் கொண்டிருந்தது.

இருந்தாலும் வேறு விதி! அவள் தலையெடுத்துதானே இந்தக் குடும்பம் நிமிர வேண்டும்.

பெரியப்பாவும், சுந்தரம் வாத்தியாரும் மாற்றி மாற்றி அட்வைஸ் சொல்லிக் கொண்டிருந்தார்கள். ஆர்டர் வந்த ஒரு மாதமாய் இதையே கேட்டுக் கேட்டு திகட்டிப் போய் விட்டது அவளுக்கு.

மெட்ராஸ் எக்மோரில் இறங்கியதும் புரசைவாக்கம் போக பஸ்வழி, ஆபீசில் எப்படி நடந்து கொள்ள வேண்டும், எப்படி சிக்கனமாக நடந்து கொண்டு ஊருக்குப் பணம் அனுப்ப வேண்டும்....

கிளம்புமுன் நமஸ்காரம் செய்த நிமிஷத்திலிருந்து அம்மா அழுது கொண்டிருந்தாள்.

கலாவதிக்குள் ஒரு வித பிரமிப்புதான் பரவியிருந்தது. ஒரு மாதமாய் அந்தக் கிளம்பும் நேரத்திற்குத் தயாராய் இருந்ததால் அழுகை வரவில்லை. எப்படிச் சமாளிக்கப் போகிறேன்!

எவ்வளவு புதிய இடம்! எவ்வளவு புதிய மனிதர்களைப் பார்க்கப் போகிறேன்!

ஸ்லீப்பர் லேடீஸ் கம்பார்ட்மெண்டில் ரிஸர்வேஷன் ஆகியிருந்தது. வழியனுப்பல் உச்சஸ்தாயியை அடைய, கண்ணைத்துடைத்துக்கொண்ட அம்மாவும், கையாட்டிய தம்பி, தங்கையும், சுந்தரம் ஸாரின் தோளில் தொங்கிய துண்டும் கொஞ்சம் கொஞ்சமாய் மறைய, கலாவதிக்குள் சிறிது சிறிதாய் வெறுமை பரவியது.

பழக்கமான லெவல் கிராஸிங், மாந்தோப்பு எல்லாம் ஓடி மறைய உலகில் தன்னந்தனியாய் நிற்பது போன்ற பிரமை ஏற்பட்டது.

இந்த நிமிஷத்திலிருந்து நான் ஜாக்கிரதையாக இருக்க வேண்டுமென்று நினைத்தாள். யாரும் இல்லை என்னைப் பார்த்துக் கொள்ள, நான்தான் நான்மட்டும்....

பன்னிரண்டு வயதில் எப்போதோ அநுபவித்த அந்த சோகம் கலந்த அதிர்ச்சி ஞாபகம் வந்தது.

அப்பா ஓடிப் போய்விட்டார்.

அவர்கள் வீட்டுக்குக் கூட்டமாக வந்து போனவர்கள் இப்படித்தான் பேசிக்கொண்டார்கள்.

வேலைக்குப்போனவர் நாலுநாட்களாய்த் திரும்பவில்லை என்று சாதாரணமாகத் தேட ஆரம்பித்தார்கள். ஆபீஸில் மொத்தமாகப் பணத்தைச் சுருட்டிக் கொண்டு, எங்கேயோ போய்விட்டார் என்று முதலில் கண்டுபிடித்தவர் சொன்னார்.

அப்புறம் யார் யாரோ சொன்னார்கள் பம்பாயில்தான் இருக்கிறார். அங்கே ஒரு மனைவி, குடும்பம் எல்லாம் உண்டு.

ஒவ்வொரு செய்தியும் அணுகுண்டாய்த் தாக்கினாலும் அந்த முதல் அதிர்ச்சி இப்போது கூட நினைத்தாலே திடுக்கிடச் செய்கிறது.

கண்ணிலிருந்து சரசரவென்று இறங்கிய நீரை அவசரமாகத் துடைத்துக் கொண்டாள்.

நிமிர்ந்தபோது எதிர் ஸீட்டிலிருந்த பெண் படுத்துக்காலை நீட்டிக் கொண்டு நாவல் படித்துக் கொண்டிருந்தாள். நல்ல வேளை அழுததைப் பார்க்கவில்லை.

கலாவதியும் அந்தப் பெண்ணும்தான் அந்த இடத்தில்-மேல் பர்த் இரண்டும் காலி.

டிக்கட் பரிசோதகர் வந்து சென்றபின் கலாவதி தங்கள் கம்பார்ட்மெண்டின் கதவை மூடும்போது எதிர்ஸீட் பெண் அவளைப் பார்த்து சிநேகமாய்ப் புன்னகைத்தாள்.

''ஏன் கதவைச் சாத்தறே?'' என்றாள் சட்டென்று.

கலாவதியை விடக் கொஞ்சம் வயது கூட இருக்கலாம். பாண்ட்டும், தொள தொள ஷர்ட்டும் அணிந்திருந்தாள்.

தலைமயிரை சரித்திரப் புஸ்தகத்தின் ராபர்ட் கிளைவ் மாதிரி வெட்டியிருந்தாள். இடதுகைச் சுண்டு விரலில் ·பிளாஸ்டிக் மோதிரம்.

''யாராவது ஜெண்ட்ஸ் வருவாங்க இல்ல'' என்றாள் கலாவதி அதற்குப் பதிலாய்.

அந்தப்பெண் அதற்கும் சிரித்தாள். கேலியாகச் சிரிக்கிறாளோ என்று கலாவதிக்குத் தோன்றியது.

பாண்ட் போட்ட பொம்பளை துணிச்சல்காரியாக-இருப்பாள். அதுதான்.





''மெட்ராஸ் போறியா?'' என்றாள் கலாவதியைப் பார்த்து. கலாவதி ஏதோ சிந்தனையிலிருந்ததால் கவனிக்கவில்லை.

தோளைத்தொட்டமாதிரிஇருக்ககலாவதி கவனம் பெற்றுப் பார்த்தாள். அவள் மறுபடியும் கேட்க, கலாவதி,

''ஆமாங்க்கா.... வேலையில் சேரப் போறேன்.'' என்றாள். அந்தப்பெண் ஒரு நிமிஷம் நெற்றியைச் சுருக்கிக் கொண்டு அவளைப் பார்த்து.

''வேலையில் சேரப் போறியா.... குட்... அதுசரி அதுக்கு முன்னால என்ன சொன்னே...அக்காவா?''

''ஆமாங்க்கா.''

''.... ஸ்ஸ்..... ஷிட்.... கால் மி ஜான்னவி. ஐயம் ஜான்னவி.'' அந்தப் பெண் கையை நீட்ட கலாவதி ஒன்றும் புரியாமல் கையைக் குலுக்கினாள்... என்ன இது ஆம்பிளைத் தனமாக....

அதன்பின் கலாவதியும் அவளும் எட்டு மணி நேர ரயில் பயணத்தைப் பேசியும் தூங்கியும் கழித்தார்கள்.

பேச்சு என்றால் ஜான்னவி கேள்வி கேட்டாள். கலாவதி ஒரு மாணவியைப் போல் பதில் சொன்னாள்.

பேசப்பேச ஜான்னவியின் மேல் அவளுக்கு மரியாதை ஏறிக் கொண்டே வந்தது. என்னவெல்லாமோ நிறையப் படித்திருக்கிறாள் இவள். ஆடிட்டராக வேலையாம். அம்மா அப்பா எங்கேயோ ஒரிஸ்ஸாவில். இவள் தனியாக மெட்ராஸில் இருக்கிறாளாம்.

பளிச்சென்று எப்படி அளவெடுத்தமாதிரி பேசுகிறாள்! பாதிக்குமேல் பேச்சில் ஆங்கிலம்தான்.... புரியவே இல்லை. ஆனால் உள்ளூர இவள் நல்லவள் என்று கலாவதிக்குத் தோன்றியது.

கலாவதி தன் வீட்டிலிருந்து கொண்டு வந்த கடுகும் சீரகமும் தாளித்த தயிர் சாதத்தையும், ஜான்னவி வி. எல். ஆரில் வாங்கிய சாம்பார் சாதத்தையும் பகிர்ந்து கொண்டார்கள்.

அவளிடம் தன் அப்பா பம்பாயில் இருப்பதாக மட்டும் சொன்னபோது உள்ளுக்குள் மனது வலித்தது கலாவதிக்கு.

புதிதாக அறிமுகமானாலும் இந்த ஜான்னவியின் அருகாமை ஏதோ ஒரு பலம் மாதிரி கலாவதிக்குத் தோன்றியது. அந்தத் தெம்பின் ஒளி வண்டியில் அமர்ந்து கொஞ்ச நேரத்தில் அவள் மேல் கவிந்து கொண்ட சோகத்தின் இருட்டைக் கூட விரட்டி விட்டது போல ஒரு பிரமை பரவ, கொஞ்சம் கலக்கம், கொஞ்சம் நிம்மதி என்று கலவையான உணர்வுகளில் கலாவதி உறங்கிப் போனாள்.

## 2

**அ**ந்தப் புதிய நாளின் சூரியன் விடியும் போது கலாவதி சென்னையில் கால் வைத்திருந்தாள்.

ஜான்னவி கடைசி நிமிஷம் வரை உறங்கி விட்டு ரயில் எக்மோரை அடைந்ததும் எழுந்து, சீப்பை எடுத்து 'விருக் விருக்' என்று தலையை வாரிக் கொண்டாள்.

புரசைவாக்கத்தில் கலாவதியின் குடும்பத்திற்கு மிகவும் வேண்டியவளான செங்கம்மாவின் குடும்பம் வசித்தது. செங்கம்மாவும் கலாவதியின் அம்மாவும் உயிர்த் தோழிகளாம்.

எப்போதாவது கிராமத்திற்கு வந்தால் செங்கம்மா அவர்கள் வீட்டில்தான் தங்குவாள்.

செங்கம்மாவின் மூத்த பையன் குமார் பிளஸ்டூ படித்துக் கொண்டிருந்தான்.

அந்தப் பையன் கலாவதியைப் பார்த்துக் கையசைக்க, கலாவதி எக்மோர் ஸ்டேஷனிலேயே புல்லரித்துப் போனாள்.

ஹப்பா... பத்திரமாய் செங்கம்மாவின் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்து விடலாம்!

ஜான்னவியைப் பார்த்துக் கையசைத்து, ''வரேங்க என்னைக் கூட்டிட்டுப் போக ஆள்வந்திருக்கு.'' என்று சொன்னபடி விரைந்த அந்த கணங்களில் கலாவதியின் ஞாபகங்களிருந்து ஜான்னவி கரைந்து போனாள்.

செங்கம்மா கலாவதியைப் பார்த்ததும் கிராமத்தில் நடந்து கொண்டிறமாதிரி முகவாயைத் தடவி திருஷ்டி கழிக்கவில்லை...

''வாடியம்மா.... இந்தா தண்ணி நின்னுடும். அதுக்குள்ள நறுக்குனு குளிச்சுப்புட்டு வா,'' என்று பிளாஸ்டிக் பக்கெட்டை 'ணக்' கென்று வைத்துவிட்டுப் போனாள்.

அவர்கள் வீடு கிக்கிடமாகத்தான் இருந்தது.

பாத்ரூம் சுவரில் செங்கல் விழுந்திருந்தது. கக்கூஸ் கதவில் துவாரங்கள்.

ஹாலில் இருந்த கொஞ்சம் இடத்திலும் செங்கம்மாவின் கணவர் தினசரியை விரித்துக் கொண்டு உட்கார்ந்திருக்க, கலாவதி அன்று குளித்து, துணி மாற்றுவதற்குள் தவித்துப் போனாள்.

எப்படி இருக்கப் போகிறேன் இங்கே! புதிய சூழல் ஆரம்பத்தில் மனதுக்கு இதமில்லாமல் இருந்தது.

புது அலுவலகத்திற்குக் கிளம்பும் கிளர்ச்சியில் அதையும் மறந்து போனாள்.....

குமார் பஸ் ஸ்டாப்பைக் காட்டினான்.

ஆபீசை அடைவது சுலபமாகவே இருந்தது. பழையகால வாசனையடித்த தோற்றம், கிறீச்சிடும் விசிறிகளும், பழுப்பேறிய தாள்களும், அடுக்கடுக்காய் தஸ்தாவேஜுகளும் அவளை வரவேற்றன.

எல்லாருமே பரபரப்பு இல்லாமல் சாவகாசமாக இருந்தார்கள்.

பெண்கள் ஸ்டைலாகக் க்ளிப்பெல்லாம் குத்திக் கொண்டுவந்திருக்க, கலாவதி முதல் முறையாகத் தன் ரிப்பன் வைத்த பின்னலைக் குறித்து நாணப்பட்டாள்.

செங்கம்மா கட்டிக் கொடுத்திருந்த புளியஞ்சாதத்தை லஞ்ச் அவரில் சாப்பிடும் போது சில பேர், அவளைச் சூழ்ந்து கொண்டு எந்த ஊரைச் சேர்ந்தவள் என்பதெல்லாம் விசாரித்தார்கள்.

கலாவதியின் ஹெட்கிளார்க்வயதானவர் எப்போதும் வாயில் அடக்கிய புகையிலை. மிகவும் அவசியமானால்மட்டுமேபேசினார்.

வேலையைப் பொறுத்தவரை அவளுக்குச் சுலபமாகவே இருந்தது. இன் — டிரே

# தங்க கவரிங் நகைகளுக்கு
# தன்னிகரற்ற பெயர் ''மெரி''

கண்ணைக் கவரும், அழகும், பொலிவும், தரமும் உத்திரவாதமும் உடைய உலகப் புகழ்பெற்ற 22ct ''மெரி'' தங்க கவரிங் நகைகளை வாங்கி அணிந்து மகிழுங்கள்!

நகைகளின் நம்பர்களைக் குறிப்பிட்டு எழுதினால் வி.பி.பி. மூலம் நகைகள் அனுப்பப்படும். வி.பி.பி. சார்ஜ் தனி. இலவச கேட்லாக்கைப் பெற எழுதுங்கள்!




# மெரி கோல்டு கவரிங் ஒர்க்ஸ்

தபால்பெட்டி : 1405, 14, ரங்கநாதன் தெரு,
தி. நகர், சென்னை-600017.




# தடையற்ற தண்ணீர் கிடைக்க



மோனோபிளாக் பம்பு



ஜெட் பம்பு



போர்ட்டபிள் பம்பு

A Product of

**DLF UNIVERSAL LIMITED**

American Universal Division

6, அவென்யூ ரோடு, நுங்கம்பாக்கம்,
சென்னை-600034, போன் : 477942.
தந்தி : குட் மோட்டார்ஸ்.

**ஷா இஞ்சினியரிங் கோ.** 153, தம்பு செட்டி தெரு, சென்னை-600001. போன்: 584850, 589936, **சக்தி முருகன் டிரேடிங் கார்ப்பரேஷன்** 160, ஜவஹர்லால் நேரு ரோடு, பாண்டிச்சேரி-605001. போன்: 24608, **என்.எஸ்.கே. எலக்ட்ரிக் மோட்டார் கோ.** 52, அருணாச்சல ஆச்சாரி தெரு, சேலம்-636001. போன்: 62037, **தேவி & கோ.** 180, டாக்டர் நஞ்சப்பா சாலை, கோயம்புத்தூர்-641018. போன்:26734, **ஸ்ரீ லட்சுமி டி கோ.** 226, நேதாஜி சாலை, ஈரோடு-638001, **ஆர்.எம்.எச். கார்ப்பரேஷன்** (ஷோரூம்) அருணாச்சல மன்றம், கோட்டை ஸ்டேஷன் சாலை, திருச்சி-620002. போன்: 26092, **சந்திரா எலக்ட்ரோ மெகானிக்கல் கார்ப்பரேஷன்** 290, மேல மாசி வீதி, மதுரை-625001. போன்: 25332, **சூரஜ் என்டர்பிரைசஸ்** 7/1, பெரி பக்காளி தெரு, வேலூர்-632004. போன்: 21646, 23928, **பி.ஆர். மணி வாட்ச் & ரேடியோ கோ.** 142, ரத வீதி, திருவண்ணாமலை-606601. போன்: 2887, **மீனாட்சி பாத்திரக் கடை** 55/ஏ, தெற்கு ரத வீதி, சிதம்பரம்-608001. போன்: 2625, **வி.கே.எம். என்டர்பிரைசஸ்** 46 ரயில்வே ஸ்டேஷன் ரோடு, திருவாரூர்-610001. போன்: 2828, **கனிமா எலெக்ட்ரிக் கோ.** 206/1, திருநள்ளாறு ரோடு, காரைக்கால்-609602. **வலம்புரி எலக்ட்ரிகல்ஸ்** 9, தம்பையாரி தெரு, பட்டுக்கோட்டை-614601, **மணி மில் ஸ்டோர்ஸ்** 722, தென்காசி ரோடு, ராஜபாளையம்-626117, **ஆனந்த் குமார் டிவி சென்டர்** பிருந்தாவன் பில்டிங்ஸ், பாரதி சாலை, கடலூர்-607001. போன்: 1061, **குறிஞ்சி எலக்ட்ரிகல்ஸ்** 2925, காந்தி ரோடு, ரயிலடி, தஞ்சாவூர்.

யில் வந்து விழுந்த டிராஃப்டுகளை கலாவதி நிமிஷமாய் டைப் அடித்து அவுட் டிரேயில் அடுக்கினாள்.

ஒரு வாரத்திற்குள் கலாவதிக்குக் கொஞ்சம் நகர வாழ்க்கை பிடிபட்டு விட்டது.

பல் விளக்கிய கையோடு குளித்து, துணி துவைத்து எல்லாம் உழக்குத் தண்ணீரி லேயே முடித்துக் கொள்ளும் சாமர்த்தியம், ஆண்களின் உரசல்களிலிருந்து தப்பித்துப் பேருந்தில் பெண்கள் கூட்டத்தில் இடுங் கிக் கொள்ளும் நளினம், இதெல்லாம் கூட வந்து விட்டது.

அலுவலகத்தில்தான் சில விஷயங்கள் புரியவில்லை அவளுக்கு. அலுவலகத்தில் நிறைய குழுக்கள் இருந்தன. யார் எந்தக் குழு என்பதே புரிவது கடினமாயிருந்தது.

மனிதர்கள் சந்தர்ப்பத்திற்குத் தகுந்த மாதிரி பச்சோந்தியை விட விரைவாய் நிறம் மாறினார்கள். அந்தச் சாமர்த்தியம் கலா வதிக்குள் படியவில்லை... பாமினி; சித்ரா, சுதா, லட்சுமி... பெரிய அணியே இருந்தது அவளுடைய செக்ஷனில். கலாவதி அவர் களோடு ஏனோ ஒன்றமுடியவில்லை.

டீ.வி. என்பதையே அவள் பார்த்தறிந்த தில்லை. கிராமத்தில் பட்டாமணியின் வீட் டில் மட்டும்தான் டீ.வி. இருந்தது. யாராவது



போனால் படபடென்று டீவியை நிறுத்தி விடுவார்கள் அல்லது கதவைச் சாத்தி விடுவார்கள். இல்லையென்றால் கிராமமே திரண்டு வந்து விடும் டீவி பார்க்க.

கலாவதி அதிகம் ரேடியோவும் கேட்க மாட்டாள். ஆபீசில் பெரும்பாலும் டீவி, சினிமா பற்றியே பேசினார்கள். சினிமாவில் வரும் துணை நடிகைகளின் பெயர்கள் கூட அவர்களுக்குத் தெரிந்திருந்தது.. கலாவதி அந்த இயந்திரத்தனம் மிகுந்த வாழ்வில் தன்னைப் பொருத்திக் கொள்ளத் திணறினாள்.

## 3

முதல் சம்பளம் வாங்கி அம்மாவின் பெயருக்கு டிராஃப்ட் எடுத்த போது தன் கஷ்டம் அத்தனையும் சிறு துரும்பாய்த் தோன்றியது அவளுக்கு.

இந்தக் காசுக்குப் பறந்துதானே இத்தனை கஷ்டமும். அம்மாவுக்காவது நிம்மதியைத் தரும் இந்தக் காசு.

"மூணு வேளை சாப்பாடு, இரண்டு காப்பி சாப்ட்டுத்தான் எங்க கொழுந்தியா இங்கேந்து வேலைக்குப் போனா. இப்பத்தான் மாத்தலாகி மதுரைக்குப் போயிருக்கிறா.. மாசம் பொறந்தா முன்னூறு ரூவா கையில குடுத்திடுவா. அந்த நாள் கணக்குக்கு இப்பக் குறைச்சல்தான். இருந்தாலும் நீ கண்ணம்மா பொண்ணாச்சே... அதையே வாங்கிக்கறேன்'' செங்கம்மா பனிச்சென்று ஒன்றாம் தேதி சொல்லி விட்டாள்.

கலாவதிக்கு இது ஒரு விதத்தில் பிடித்திருந்தது. காசைக் கொடுத்து விட்டுக் குற்ற உணர்வில்லாமலாவது இருக்க முடிந்தது.

ஆனால் இரண்டு மாதங்களிலேயே இந்த சுவாதீனம் மாறும் என்பதைக் கலாவதி எதிர்பார்க்கவில்லை...

"காசை விட்டெறிஞ்சுட்டுத் தின்னுட்டுப் போக நான் என்ன இங்கே சாப்பாட்டுக் கடையா நடத்தறேன்?"

செங்கம்மாவின் வார்த்தைகள் நெருப்புத் துண்டாய் விழுந்தன ஒருநாள்.

"காலைல எழுந்தா எனக்குத் தண்ணி புடிக்கணும், சோறு வைக்கணும், டிபன் கட்டணும், புள்ளைங்களுக்குத் தலைய வாரி பள்ளிக் கூடத்துக்கு அனுப்பணும்.. ஒண்டியா நான் என்ன சாவறதா?''

குடித்துக் கொண்டிருந்த காலைக் காப்பி தொண்டையிலேயே நிற்க கலாவதி அரண்டு போனாள்... மெதுவாக,

"அதுக்கென்ன அக்கா, நான் கூடமாட ஒத்தாசை செய்யிறேன். சொல்லுங்களேன்'' என்றாள்.

"வேலைக்காரி அஞ்சலை நின்னுட்டா... அவரு டிபன் செட்டோட ஏழரை மணிக்கு ஒர்க்ஷாப் போவணும்.. அங்கே பாரு பாத்திரம் எம்புட்டு குவிஞ்சிருக்குனு'' செங்கம்மா காட்ட அன்றிலிருந்து கலாவதி அங்கே வேலைக்காரியானாள்.

இருந்தாலும் விசனப் படாமல் வேலை செய்தாள். ஒருநாள் விட்டு ஒருநாள் இட்லி, தோசைக்கு ஒரு லிட்டர், ஒன்றரை லிட்டர் என்று ஊறவைத்து விடுவாள் செங்கம்மா.

வியர்வை வழிய கலாவதி சலிக்காமல் அரைத்து வைப்பாள். நம்ம செங்கம்மா அக்காவுக்குச் செய்யறோம்.. எவ்வளவு நல்லவங்க இவங்க... பட்டுப்பட்டுனு பேசினாலும் உள்ளூர பிரியந்தான் அவங்களுக்கு.

சில நாள் ஆபீசில் ஏகமாய் டைப்படித்துக் குவித்ததில் முதுகும் நெஞ்சும் வலித்தாலும் முணுமுணுக்காது அரைத்து வைப்பாள் கலாவதி. அவளுக்குள் கலந்திருந்த அந்த கிராமியம் அவளை எந்த விஷயத்தையும் தவறாக எடுக்காமல் செய்திருந்தது.

வெளுத்ததெல்லாம் பால் அல்ல என்பதைக் கலாவதி கண்டு கொண்ட நாளும் வந்தது.

வெந்நீர்த் தவலையைத் தேய்க்கும் போது கையை வெட்டிக் கொண்டது ரணமாகி விட்டது.

கலாவதியே அடுத்த நாளும் அவஸ்தைப் பட்டுக் கொண்டே பாத்திரம் துலக்க செங்கம்மா கண்டும் காணாமல் போய் விட்டாள்.

ஆபீசுக்குப் போனதும் சோதனையாய் வேலையும் அதிகமிருக்க, பியூனை விட்டு ஒரு பாண்ட் எய்ட் வாங்கி வந்து விரலில் சுற்றிக் கொண்டாள்.

மதியம் செக்ஷன் ஆபீசர் சேகர் கூப்பிடுவதாகச் சொன்னதும் "ஐயோ இன்னைக்கு டிக்டேஷன் வேறயா?'' என்று நினைத்தபடி சுருக்கெழுத்து நோட்டும், பென்சிலுமாய் உள்ளே போனாள்.

செக்ஷன் ஆபீசர்களெல்லாம் தலை நரைத்து, வழுக்கை விழுந்தவர்களாய் இருக்க சேகர் மட்டும் பரீட்சையெல்லாம் தேறி முப்பது வயதிற்குள்ளேயே எஸ்.ஓ.வாக சமீபத்தில்தான் வந்திருந்தான். நறுக்கென்று மீசை வைத்துக் கொண்டிருந்தான்.

கலாவதி நோட்டைப் பிரித்துக் கொண்டு

---

**சோடாவும் வாயுவே**

**வயிறு பொருமிக் கொண்டு வாயுத் தொல்லையாக இருக்கிறது. என்று சோடா குடிக்கிறார்களே. இது தவறு. காற்றெல்லாம் வெளியே வந்து விட்டது போல் ஏப்பம் வரலாம். ஆனால் சோடாவில் உள்ள வாயுவும், பாதி உள்ளே தங்கிவிடும். மேலும்வயிறு பொருமிக் கொள்ளும்.**

**Hot water bag — இ ன ா ல் ஒத்தடம் கொடுத்தால், நிவாரணம் கிடைக்கும்.**

**— ஜெயா.**

---

உட்கார்ந்ததும் விரலில் சுற்றியிருந்த பாண்ட்—எய்டைக் கவனித்து.

''என்னங்க ஆச்சு?'' என்றான் மிருது வாக, கலாவதி அந்தப் பரிவில் நெகிழ்ந்து போனாள்.

காலையில் செங்கம்மா பார்த்தாள். ஒப்புக்குக் கூட ஒன்றும் கேட்கவில்லை. பாமினியும், சுதாவும் கூட பார்த்தார்கள் அட்டெண்டன்ஸில் கையெழுத்துப் போடத் தத்தளித்ததை. அவர்கள் கேட்கவில்லை. அதிகப் பழக்கம் கூட இல்லை. இந்த எஸ். ஒ. கேட்கிறார்!

கலாவதி வெந்நீர்த் தவலையில் வெட்டிக் கொண்டதைச் சொன்னாள்.

''ஆனாலும் நீங்க ரொம்ப தாராளங்க. வெட்டிகிட்டதுதான் செஞ்சீங்க ஒரு சின்ன ஸ்பூனோ, பாத்திரமோ அகப்படலையா?'' பளிச்சென்று சிரித்தான்.

''ஆமா, நீங்க என்ன அவ்வளவு பெரிய குடும்பமா?'' என்றவனிடம் தான் செங்கம் மாவின் வீட்டில் தங்கியிருப்பதைச் சொன்னாள்.

''பேயிங்க் கெஸ்ட்தானே நீங்க?'' டக் கென்று நாடியைப் பிடித்த மாதிரி அவன் கேட்க, கலாவதி யோசனையாய்,

''....ஆ....மாம்... ஏன் கேக்கறீங்க?'' என்றாள்.

''இல்ல... காசக் குடுத்துட்டு உமன்ஸ் ஹாஸ்டல்ல இருக்கலாமே. ஏன் வீணாக் கிடந்து அல்லாடறீங்க?''

அவளுக்கு அந்த நினைப்பே பிரமிப்பாக இருந்தது... ஆனால் எப்படிப் போக முடியும்...?

கலாவதி ஏதும் பேசாமல் குறிப்பெழுத நோட்டைத் தயாராய் வைத்துக் கொண் டாள். 'சொல்லுங்க' என்ற பாவனையில் பார்த்தாள்.

''என்ன... நோட்ஸ் எடுக்கப் போறீங் களா? சுத்தப் பிழைக்கத் தெரியாதவங்களா இருக்கீங்களே... போய் வேற யாரையாவது அனுப்புங்க போங்க.''

வெளியே வரும் போது சேகர் ரொம்ப நல்லவர் என்று நினைத்துக் கொண்டாள்.

## 4

**அ**ன்றைக்கு மத்தியானத்திற்கு மேல் கடுமையான பல்வலி வந்து கலாவதி துடித் துப் போனாள்.

ஹெட்கிளார்க் ''பல் டாக்டர்கிட்டே போங்க. பாரீஸ் கார்னர்ல சைனீஸ் டாக்டர் ஒருத்தரு என் ஃபிரண்டு. அவர்ட்ட போங்க'' என்றார்.

கலாவதி தன் ஆபீசிலிருந்து பஸ் பிடித்து அங்கே இறங்கி நடந்து போனாள். பொப் பட் ஜமாவில் தொங்கும் சாண்டலியர்க ளைப் பார்த்தபடி நடந்தாள்.

பல் டாக்டரிடம் கூட்டம் அதிகம் இருக்க வில்லை. மருந்து வாங்கிக் கொண்டு வெளியே வந்த போது ஏறக்குறைய எதிரில் வந்த பெண் மேல் மோதிக் கொண்டாள்.

''ஸாரி மேடம்'' என்றபடி கலாவதி நிமிர்ந்த போது....

''இட்ஸ் ஆல்ரைட்... ஹேய்! வெய்ட் எ மினிட்... நீ... நீ... கலாவதி இல்ல!'' என் றாள் அந்தப் பெண்.

ஷிஃபான் புடவையும், கையில்லாத சட் டையும் போட்டுக் கொண்டு அந்தத் தலை முடி... இவள் ரயிலில் சந்தித்த... என்ன... ஆங்... ஜான்னவி... அவளேதான்!

''ஹலோ... எப்படி இருக்கீங்க?'' கலா வதி சம்பிரதாயமாக கேட்டாள்.

''ஃபைன்... உன் வேலை எப்படி இருக்கு? எங்கே தங்கியிருக்கே? கலாவதி சொன் னாள்.

''நீயும் நானும் பாத்தியா, ஒண்ணா மெட் ராஸுக்கு வந்தோம். இப்ப ஒரே நாள்ல பல் வலியோட வந்திருக்கோம்.''

அவள் கடகடவென்று சிரிக்க கலாவதி அவளை ஆச்சரியமாகப் பார்த்தாள்.

''நான் இங்கேதான் இருக்கேன் எக்மோர். ஹாஸ்டல்ல... ஏதாவது ஹெல்ப் வேணா வாயேன்.''

ஜான்னவி தன் விலாசம் கொடுத்து விட்டு டாக்டரைப் பார்க்கப் போனாள்.

ஜான்னவியின் ஹாஸ்டலைப் பார்க்க வேண்டும் போலிருந்தது கலாவதிக்கு.. ஒரு ஞாயிற்றுக் கிழமை போய்ப் பார்க்கலாம் என்று நினைத்துக் கொண்டதற்கு ஏற்ப அதற்கு அவசியம் விரைவிலேயே நடந்தது...

**பால் நல்லதுதான். ஆனால்......**

**அல்சர் புண்ணினால் பாதிக்கப்பட் டவர்கள், வயிற்றில் வலி ஏற்படும் பொழுது, பால் சாப்பிடுகிறார்கள். வெறும் பால் வயிற்றில் அமிலம் சுரக் கச் செய்ய வல்லது. அதனால் பாலை யும் antacid மாத்திரை அல்லது திரவத்து டனேயே அருந்துவது நல்லது.**

**— ஜெயா.**

**மா**ர்க்கெட்டுக்குப் போயி காய் வாங் கியா என்று ஒரு பெரிய லிஸ்டைக் கொடுத்திருந்தாள் செங்கம்மா.

ஞாயிற்றுக்கிழமையானால் அந்த வேலை வேறு. நிதானமாய்ப் பார்த்து நல்ல காய் கறியாக வாங்கிக் கொண்டிருந்தாள் கலாவதி.

தக்காளி வியாபாரியுடன் சத்தம் போட்டுக் கொண்டிருந்த அஞ்சலையின் குரல் தனியா கக் கேட்டது.

கலாவதி பக்கத்தில் சென்று அவள் கையைப் பற்றிக் கொண்டாள்.

''என்ன அஞ்சலை... எப்படியிருக்கே?'' ஆர்வமாகக் கேட்டாள். கொஞ்ச நாள் பழக்கத்திலும் அஞ்சலையை அவளுக்குப் பிடித்திருந்தது.

"அடி ஆத்தி... நீதனா... நான் யாரோன்னு நினைச்சேன்... ஞாபகம் வச்சு கினுகிறியா? அப்பாவிப்புள்ள... நல்லா வசமாத்தான் சிக்கியிருக்க அந்த செங்கம் மாவண்ட" என்றாள்.

"என்ன அஞ்சலை அப்படி சொல்றே? அக்கா நல்ல மாதிரித்தான்" என்றாள் கலாவதி மறுக்கும் விதமாக.

"அய்ய.... ரொம்ப நல்லவங்க... நீதான் மெச்சணும்... நீ ஊர்லேந்து வந்த கொஞ்ச நாள்லயே என்னை நிறுத்திப்புட்டாளே... மாசம் முப்பது ரூவா மிச்சம் பிடிக்கலாம் பாரு... அப்படித்தான் முன்ன அவ கொழுந்தியாளைத் துரத்துனா... பாவம் நீ எம்புட்டு நாளைக்கோ?"

அஞ்சலை 'பச்' சென்று வெற்றிலைச் சாறைத் துப்பி விட்டு நடக்க, கலாவதிக்குள் மீண்டும் அந்த எண்ணம் ரீங்காரமிட்டது...

ஹாஸ்டலுக்குப் போய்ப் பார்க்கலாம். எத்தனை செலவாகுமோ? ஜான்னவியின் ஞாபகம் வந்தது.

அவள் ஹாஸ்டலைப் போய்ப் பார்க்கலாமே. அன்றைக்கு மதியமே போகத் தீர்மானித்துக் கொண்டாள்...

மத்தியானச் சாப்பாட்டுக்குப் பின் செங்கம்மா படுக்கையை விரித்துக் கொண்டாள். கலாவதி முடிவு செய்தபடி தலையை வாரிக் கொண்டு, புடவையை மாற்றிக் கொண்டு கிளம்பினாள்.

"சீவி சிங்காரிச்சுகிட்டு எங்கே கிளம்பிட்டே?"

---

**சாதாரணமாக ரொம்ப நேரம் வேகும் சேனைக் கிழங்கை அதிக அடுப்பு எரிதலின்றி பஞ்சுபோல் வேக வைத்தேன். வேகும் போது ஒரு சிறு வெல்லக் கட்டியைப் போட்டேன் என்றார் பாட்டி. இம்முறையில் நானும் பயனடைந்தேன்.**

**— ராஜம்.**

---

செங்கம்மா இப்போதெல்லாம் பேசும் தொனியே இப்படித்தான் ஆகி விட்டது. கலாவதி தனக்குள் சன்னமாகப் பரவிய சீற்றத்தைக் கட்டுப்படுத்திக் கொண்டு,

"என் ஃபிரண்டைப் பாக்கப் போறேன்" என்றாள்,

"அய்ய.... யாரது பிரண்டு, ஆம்பளையா, பொம்பளையா?"

கலாவதிக்கு இப்போது கண் கலங்கியது. அந்த நிஷ்டூரத்தைத் தாங்க முடியாமல்...

"......ஏங்க்கா ஒரு மாதிரி பேசறீங்க..., என் ஃபிரண்டு பொம்பளைதான்" என்றாள்.

"...க்கும்... ஒண்ணும் சொல்ல முடியாதுடியம்மா.... இந்தக் காலத்துல... வேலைக்குக் கிளம்பிட்டவளுகளை."

. கலாவதி மௌனமாக இறங்கி நடக்க ஆரம்பித்தாள்.

பெண்கள் ஹாஸ்டல் பஸ் ஸ்டாப்புக்கு எதிரிலேயே இருந்தது. சாரிசாரியாய் அசோக மரங்களும், ஒற்றைச் செம்பருத்திகளும்... அந்தப் புல் தரையின் ஒழுங்கும் அமைதியும் அவளுக்குப் பார்த்தவுடனே பிடித்து விட்டது.

ரிஸப்ஷனில் நகத்தைக் கடித்தபடி உட்கார்ந்திருந்தாள். ஒரு பெண் ஜான்னவியிடம் விஸிட்டர் வந்திருப்பதைச் சொல்லப் போனாள்.

"அட.... வாடா... நீதானா.... ரூமுக்கு வா. நான் நைட்டியில இருக்கேன்... ரூம்ல பேசிப் பேசுவோம் வா" என்றபடி ஜான்னவி கலாவதியின் தோளில் சாவதானமாகக் கையைப் போட்டுக் கொண்டு ரூமுக்கு அழைத்துப் போனாள்.

"உன்னோட அதிருஷ்டம்னு சொல்லலாம்... யூஷுவலா ஸண்டேஸ்ல நான் ஊர் சுத்தப் போயிடுவேன்... இன்னைக்குப் பாரு லஞ்சுக்கப்பறமும் தூக்கம்... நேத்து ஒரு ஆடிட்டை முடிச்சுட்டுக் கோயம்புத்தூர் லந்து வந்தேனா..."

ஜான்னவியின் அறையில் இரண்டு கட்டில்கள் இருந்தன. சுவரில் இயற்கை அழகின் போஸ்டர்கள். ஒழுங்கான வரிசையில் புத்தகங்கள்.

"உக்காரு.... என்ன விஷயம்?" என்றாள் மிருதுவாக.

"...வந்து.... எப்படியாச்சும் இந்த ஹாஸ்டல்ல ஒரு இடம் கிடைக்குமா... எத்தன ரூவா ஆகும்... சொல்லுங்க" என்றாள்.

ஜான்னவி எதிரிலிருந்த நாற்காலியில் சரிந்து கொண்டாள். தீர்க்கமாக அவளைப் பார்த்தாள்.

"ஏன், நீ உங்க ரிலேஷன் யார் கூடவோத்தானே இருக்கே. ஹாஸ்டலுக்கு வர விரும்பறியா?"

கலாவதி எச்சிலைக் கூட்டி விழுங்கினாள்.

"பிடிக்கலைங்க. ஒரு மாதிரி கொடுமையா இருக்கு. பாத்திரம் தேய்க்க சொன்னாங்க. இங்கே பாருங்க விரல் எல்லாம் வெட்டித் தளும்பாயிடுச்சி... தினம் மாடு மாதிரி இட்லி தோசைக்கு அரைக்கறேன். வேணும்னே நிறைய வேலை வாங்கறாங்க... அட அதையெல்லாம் கூடப் பொறுத்துகிடுவேன்... கன்னாபின்னான்னு பேசறாங்க... இப்ப வெளியக் கிளம்புனா எந்த ஆம்பளயப் பாக்கப் போறேன்னு கேக்கறாங்க."

கண்ணில் ஈரம் எட்டிப் பார்த்தது.

ஜான்னவி அமைதியாகப் புன்னகை செய்து கொண்டாள்.

"...எங்க வீடு மாதிரி நினைச்சு வேலையெல்லாம் முகஞ்சுளிக்காம செய்துகிட்டிருந்தேன். ஆனா என்னைத் தப்பா பேசறதைப் பொறுக்க முடியலீங்க. எங்க ஆபீஸ்ல கூட சொன்னாங்க... பேசாம ஹாஸ்டல்ல சேந்துருங்கன்னுட்டு."

# கோ-ஆப்டெக்ஸ்

# இல்லங்களுக்கு · எழிலூட்டும் · துணிவகைகள்













ஒவ்வொரு பெண்ணும் இல்லத்தரசியாகிறாள்... உங்களது இல்லங்களில் அழகு மிளிர்ந்திட கோ-ஆப்டெக்ஸ் அளித்திடும் சிறந்த துணி வகைகள்— எண்ணற்ற வண்ணங்களில்.

- ☐ இதமான துவாலைகள்
- ☐ பரந்த படுக்கை விரிப்புகள்
- ☐ மனம் கவரும் மேசை விரிப்புத் துணிகள்
- ☐ புதுமை பொலிந்திடும் திரைச் சீலைத்துணி வகைகள்

**உங்கள் இனிய கனவுகள் நனவாகும் போது அதிலே கோ-ஆப்டெக்ஸின் பங்கும் உண்டு!**



**கோ-ஆப்டெக்ஸ்**

தமிழ் நாடு கைத்தறி

இந்தியாவின் உயர் விற்பனைக் கைத்தறி வகைகள்

DIPR/1766/MS 88/HTA



# கண்களுக்குக் கூர்மை, குளுமை, இனிமை

## ஐடெக்ஸ்




சாஸ்திரீய முறையில் தயாராகும்
ஐடெக்ஸ் மை கண்களுக்கு
குளுமையூட்டி பாதுகாக்கிறது.
எவ்வித தீங்கும் விளைவிக்காது.
பாதுகாப்பானது. பச்சிளம் குழந்தையின்
கண்களுக்குக்கூட!

**ஐடெக்ஸ்**
**48 ஆண்டுகளாக**
**உங்கள் நம்பிக்கையின்**
**மகத்தான சின்னம்**

அரவிந்த் லாபரடரீஸ் சென்னை-600 033.

Imageads 2496 R

"ஸோ.... சுதந்திரமா இருக்க விரும்பற...: அதையேன் ஏதோ தப்பு பண்ணிட்டு மன்னிப்பு கேக்கற மாதிரி சொல்றே... ஆஃப்டர் ஆல் அது உன்னோட ரைட் இல்லையா?" என்றாள் ஜான்னவி.

கலாவதி விழித்தாள்... கொஞ்சம் புரியவில்லை..

"...புரியலையா... நீ சம்பாதிக்கற... நீ வாழற... எப்படி எங்கே இருப்பேங்கறதைத் தீர்மானிக்கறது உன்னோட உரிமை ஒத்துக்கறியா?"

"....ஆமாங்க" என்றாள்.

"உன்னோட ஸ்டார் நல்லா இருக்குனு நினைக்கறேன். என்னோட ரூம்மேட் காலி பண்ணப் போறா... நீ வந்துரு" என்றதும் கலாவதிக்குள் குப்பென்று சந்தோஷம் குமிழியிட்டது.

ஜான்னவியோடு இருக்கப் போகிறோம்... எந்த பயமும் இல்லை...

"ரூபா ஜாஸ்தியாகுமா?" என்றாள் யோசனையாக.

"நீ இப்ப குடுக்கறதுக்குக் கொஞ்சம்தான் கூட ஆகும். ஆனா பாத்திரமெல்லாம் தேய்க்க வேண்டியதில்லே" என்றாள் சிரித்துக் கொண்டே.

"அது சரி அவங்களைக் கன்வின்ஸ் பண்ணிடுவியா ஹாஸ்டலுக்குப் போறேங்கறதை?"

ஜான்னவியின் சந்தேகம் சரியாகத்தான் இருந்தது. செங்கம்மா நிறைய ஆட்சேபணைகளை எழுப்பினாள்... தனியாக மெட்ராஸில் ஒரு பெண் இருக்க முடியாது... ரவுடித் தொந்தரவு வரலாம் என்று பயமுறுத்தினாள்.

செங்கம்மா தடுக்கனடியில் ஊடுருவும் பூச்சியைப் போல என்றால் கலாவதி கோலரேகையினடியில் ஒளிந்து கொள்ளும் பூச்சியாய் நழுவி வெளியேறினாள்....

செங்கம்மாவின் கடிதம் பார்த்து அம்மாவிடமிருந்து கலாவதிக்கு ஆட்சேபணையில் ஒரு கடிதம் கூட வந்தது... என்ன இருந்தாலும் நீ வீட்டுப் பாதுகாப்பிலிருந்து வந்திருக்கக் கூடாது... செலவு ஜாஸ்தியாகும்...

கலாவதி யோசித்து யோசித்து முடிவாய் ஒரு காரணம் கண்டுபிடித்தாள்.

செங்கம்மாவின் வீடு மிகவும் சிறியது. குளிக்க, துணி மாற்ற ரொம்ப அசௌகரியம். செங்கம்மாவின் கணவர் சகஜமாய் இல்லாததால் அங்கே புழங்குவது கூச்சமாக இருக்கிறது.

அம்மா கொஞ்ச நாளில் சமாதானமாகி விட்டாள்.

## 5

கலாவதியின் முன்னேற்றம் இப்போது பளிச்சென்று தெரிந்தது. ஏதோ லோஷன் தடவிக் கொண்டாள். புருவங்களை ஷேப் செய்து கொண்டாள். பியூட்டி பார்லரின் விஸியா ஒவ்வொரு முறை போகும் போதும் 'தாங்க்யூ' சொல்லும் அழகுக்கே அடிக்கடி போகலாம் என்று அவளுக்குத் தோன்றியது.

ஜான்னவியின் புஸ்தகம் படிக்கும் வெறியைக் கண்டு பிரமித்துப் போனாள். உலகத்தில் சாப்பிடுவது, தூங்குவது, கல்யாணம் பண்ணிக் கொள்வது, சீட்டு கட்டுவது, புடவைவாங்குவதைமீறிபிறசுவாரசியமான விஷயங்கள் இருக்கின்றன என்ற ஞானம் அவளுக்குள் எட்டிப் பார்த்தது..

ஜான்னவியின் ஒழுங்கின் பாதிப்பில் கலாவதி கூட சிறிது மாறிப் போனாள். எதையும் தானே முடிவு செய்து நடந்து கொள்ள ஆரம்பித்தாள்.

ஹாஸ்டலில் டீவி பார்ப்பதில் பொது விஷயங்கள் கூட இப்போது தெரிகின்றன. ஆபீசிலும் சகஜமாய்ப் பேச முடிந்தது அவளால்.

குலோப் ஜாமூனை ஆறிய பாகில் போட்டு ஊற வைத்தால் உடையவே உடையாது. விரிசலும் ஏற்படாது.

— 'ஜாக்'

இப்போதெல்லாம் சேகர் தவறாமல் ஒரு தடவையாவது பேசினான். காலையில் பார்த்ததும் கண்கள் சுருங்கப் புன்னகைத்து "குட்மார்னிங்" என்பான். அவளுடைய வேலைகளைத் தவறாமல் பாராட்டினான்.

கலாவதி ஊருக்குக் கிளம்பு முன் கிராமத்தில் அம்மா சொன்னதை ஞாபகப்படுத்திக் கொள்வாள்....

"எல்லார்ட்டயும் நல்லாப் பழகு... ஆனா ஆம்பளை சகவாசம் வேணாம்... ஜாக்கிரதை... நான் ஒருத்தி பட்டது போதும் ஆம்பிளைய நம்பி.. இரண்டு வருசம்போவட்டும்... நானே நல்ல பையனாப் பாத்து முடிச்சு வைக்கறேன்."

கலாவதி மனசு சஞ்சலமான சமயங்களில் "நல்ல பையனாப் பாத்து" என்பதை ஞாபகப்படுத்திக் கொள்வாள்... இணையாக ஒரு மனது "சேகர் மாதிரி நல்ல பையனாப் பாத்து" என்று குரல் கொடுக்கும். அந்த எண்ணத்திலேயே வெப்பமாகிப் போவாள்... ச்சீ... என்ன பேராசை... அவர் படிப்பு என்ன, போஸ்டு என்ன... மனசு அடங்கி விடும்.

சேகர் அவளுடைய பிறந்த நாளைக் குறிப்பில் பார்த்து கிரீட்டிங்க்ஸ் அனுப்பினான்... ரோஜாக் கொத்து போட்ட பெரிய விலை உயர்ந்த கிரீட்டிங்க்ஸ்... அவன் ஏதோ சொல்ல முயல்கிறான் என்று தோன்றியது. மனசு படபடத்தது.

"எதுக்கு கிரீட்டிங்க்ஸ்... வாயால சொன்னாப் போதுமே" என்றாள்.

"மத்தவங்கன்னா சரி... ஆனா நீங்க எனக்கு ஸ்பெஷலாச்சே."

சேகர் அவளிடம் பேசிய அளவுக்கு வேறு எந்தப் பெண்ணிடமும் பேசவில்லை என்

பதால் அவளுக்குள் உள்ளூர கர்வம் இருந்தது.

உடனே தன்னைக் கடிந்து கொள்வாள். கர்வமே கூடாது... என்றும்... எதைப் பற்றியும்...

ஒருநாள் ஆபீசுக்குப் போய் சேகரைப் பார்க்காவிட்டாலும் அவளுக்கு 'விறிச்' சென்று இருந்தது.

அவனுக்கும் அப்படித்தான் இருக்கிறதாம். அவள் பொங்கல் சமயத்தில் ஒரு வார லீவில் கிராமத்திற்குப் போயிருந்தாள். வந்ததும் சொன்னான்.

ஜான்னவியிடம் சேகரைப் பற்றிச் சொல்லலாமா என்று தோன்றும்.

இப்போதெல்லாம் அவளை ஜானா என்றுதான் கூப்பிடுகிறான்.. சொன்னால் எப்படிப் புரிந்து கொள்வாள் என்று தெரியவில்லை. ஜான்னவி வெகு சாதாரணமாக எல்லோரோடும் பழகினாலும் ஒரு குறிப்பிட்ட ஆணுடன் அவள் கூடுதல் நெருக்கம் காட்டினாள் என்று சொல்லவே முடியாது.

அதை கவனித்திருந்ததால் சேகர் விஷயத்தை அவளிடம் சொல்லக் கூச்சமாக இருந்தது.

ஒரு ஞாயிறன்று சேகரிடமிருந்து ஹாஸ்டலுக்கே ஃபோன் வந்த போது கலாவதி பரபரத்துப் போனாள்.

'ஸோனால் மான்சிங்'கின் நடன நிகழ்ச்சிக்கு ஒரு டிக்கெட் இருக்கிறது. வர முடியுமா என்று கேட்டான்.

கலாவதிக்குத் தயக்கம் ஏதும் இருக்கவில்லை.

சினிமாவுக்குப் போவதை விட நடனம் பார்ப்பது நளினமாகத் தோன்றியது. விரசமான, சங்கோஜமான தருணங்கள் இருக்காது. கச்சேரி கேட்கிற மாதிரிதான் இதுவும்... ஆனால் ஜான்னவி என்ன சொல்லுவாளோ!

அவள் தன் வி.ஏ. இன்ஸ்டிடியூட்டுக்குப் போயிருந்த போது கலாவதி விரைவாக ராஜா அண்ணாமலை மன்றத்துக்குக் கிளம்பி விட்டாள். சீக்கிரம் திரும்பி விட வேண்டும் என்று நினைத்தபடி.

சேகரின் பக்கத்து லீட்டில் உட்கார்ந்த போது குறுகுறுப்பு உச்ச நிலையை அடைந்தது. அவனுடைய விசேஷமான தலைவாரலும், ஸெண்ட் மணமும் கிளர்ச்சியூட்டின. ஆனால் வாய் ஏதும் பேசாமல் எல்லாவற்றையும் அடக்கியிருந்தது.

அவன் மிக சகஜமாகப் பேசிக் கொண்டிருந்தான். அவள் மௌனியாக இருந்தாள். இரவு எட்டு மணிக்கு ஹாஸ்டலில் அவளை விட்டு விட்டுக் கையசைத்து விட்டு சேகர் போய் விட்ட போது தனக்குள் சன்னமாகப் பரவியிருந்த ஏமாற்ற உணர்வை அவள் புரிந்து கொண்டாள்.

எவ்வளவு வார்த்தைகள் இருக்கின்றன அன்பை உறுதிப்படுத்துவதற்கு... பிரியத்தைப் பகிர்ந்து கொள்வதற்கு... கதையிலும் சினிமாவிலும் எவ்வளவு விரைவாய்ச் சொல்லி விடுகிறார்கள். சேகரைக் குறித்த தன் எதிர்பார்ப்புகள் அவளுக்குள் வெட்கத்தையும் பயத்தையும் ஏற்படுத்தின. அந்த வழக்கமான டயலாக்குகளை சேகர் விரைவில் பேசிவிட வேண்டும் என்று அவள் கடவுளைப் பிரார்த்தித்துக் கொண்டாள்...

ஜான்னவியிடமிருந்த தனித் தன்மை, அவள் கலாவதியை எங்கு போனாய், யாரோடு போனாய் என்று கேட்கவே இல்லை. அவள் கேட்காததே கலாவதிக்குள் ஒருவிதக் குற்ற உணர்வை ஏற்படுத்தியது.

சொல்லிக் கொள்ளலாம்... எல்லாம் கூடி வந்ததும் சாவகாசமாய்ச் சொல்லிக் கொள்ளலாம். சமாதானப்படுத்திக் கொண்டாள்.

## 6

**சே**கர் திடீரென்று ஒரு வார லீவில் போய் விட்டான். என்ன காரணமோ தெரியாது. கலாவதிக்கு ஒவ்வொரு நிமிடமும் நரகமாக இருந்தது.

''பொண்ணெல்லாம் பார்த்துட்டாரு... நிச்சயதார்த்தத்துக்குத்தான் போயிருக்காப்பல,'' ஆபீஸின் வம்புப் பேரரசியான மாலதி சொன்னதும் கலாவதி நொறுங்கிப் போனாள்.

பல்வலி - தொந்தரவினால் அவதிப்படுபவர்கள் இஞ்சியை பல்வலிக்கும் இடத்தில் வைத்துக் கொண்டு இஞ்சிச் சாறு அதில் வரும்படி பல்லினால் அழுத்தி வைத்துக் கொண்டால் பல்வலி இருக்கும் இடம் தெரியாமல் ஒரு நிமிஷத்தில் மறைந்துவிடும். பல்வலிக்கு இஞ்சி ஒரு வரப்பிரசாதம்.

— லக்ஷ்மி.

பின்னே என்னவென்று நினைத்துக் கொண்டாய். அவர் படிப்பு என்ன, உன் ஸ்டேட்டஸ் என்ன என்று மனது குற்றம் சாட்டியது.

அப்படியென்றால் 'நீ எனக்கு ஸ்பெஷல்' என்றதற்கு என்ன அர்த்தம்? வெளியே கூட்டிப் போனதற்கு என்ன காரணம்? அவள் தவித்தாள். மாலதி சொல்வது பொய்யாக இருக்க வேண்டுமே என்று மனது இறைவனை இறைஞ்சியது.

அடுத்த வாரம் லீவு முடிந்து லீட்டில் வந்து உட்கார்ந்திருந்தவனைக் கண்டதும் மனது பொங்கியது.

கூப்பிடுவான் பிறகு போகலாம் என்று தவிப்போடு காத்திருந்ததில் மத்தியானம் வந்துவிட்டது.

தாங்க முடியாமல் விறுவிறுவென்று அவன் அறைக்குப் போனாள்.

''வாங்க... நானே உங்களைப் பார்க்க

ணும்னு இருந்தேன். எப்படி இருக்கீங்க?'' என்றான் சாதாரணமாக.

''என்ன திடீர்னு லீவு... ஏதாச்சும் விசேஷமா... எங்கிட்டக் கூடச் சொல்லவேயில்ல... லீவு போட்டீங்க?'' என்றான் பட்டென்று.

அவன் நடைகள் இறுகின மாதிரித் தோன்றியது. கேள்வியை விரும்பாத மாதிரி இருந்தது முகத்தைப் பார்த்தால்.

சட்டென்று இறுக்கத்தைத் தளர்த்திக் கொண்டு விட்டான். முகத்தில் புன்னகை கூடத் தோன்றியது.

''விசேஷமா? ஓ! மேரேஜ் பத்திக் கேக்கறீங்களா? அப்படி ஏதாச்சும்... ஃபிக்ஸ் ஆச்சுன்னா முதல் இன்விடேஷன் உங்களுக்குத்தான்.''

அவனுடைய பார்வையில் 'புரிந்ததா?' என்ற பாவனை இருந்தது.

''வேறே என்ன... வேலையெல்லாம் எப்படிப் போயிக்கிட்டிருக்கு?'' கலாவதி வீட்டுக்கு வந்தபோது உயிரற்றவள் மாதிரி இருந்தாள்.

நட்பு... வெறும் நட்புதான் அவன் தன்னிடம் நாடியிருப்பது. சேகர் மேல் கோபப்படக் கூட நியாயமில்லை என்று நினைத்தாள்.

**பழைய டைரியின் மேலட்டை (ரெக்ஸின்) வீணாக இருக்கிறதா? வட்ட வடிவத்தில் கத்திரித்து, சூடான பாத்திரங்கள் வைக்க 'டேபிள் மேட்'டாகப் பயன்படுத்தலாம்.**

**— 'ஜாக்கி'**

இருந்தாலும் அந்த ஏமாற்றம் இடி மாதிரி நெஞ்சில் இறங்கியது. வாழ்க்கையில் இன்னும் எவ்வளவோ தெரிந்து கொள்ள வேண்டியது இருக்கிறது என்று சமாதானப்படுத்திக் கொண்டாள்.

ஆபிசில் இருக்கப் பிடிக்கவில்லை. அழுகை முட்டிக் கொண்டு வந்தது. தன் மீதே வெறுப்பும் கோபமும் மண்டியது.

லீவ் போட்டுவிட்டு ஹாஸ்டலுக்குப் போனாள்.

படுக்கையில் கவிழ்ந்து கொண்டதும் சரசரவென்று கண்ணீர் பொங்கியது. மனத்தின் கனத்தை வடிக்க நிறைய அழத் தோன்றியது.

அடுத்த நிமிஷம் யாரோ கதவைத் தட்டும் சத்தம் கேட்டது.

திடுக்கிட்டு எழுந்து அவசரமாகக் கண்ணைத் துடைத்துக் கொண்டாள். கதவைத் திறந்தால்... வெளியே ஒரு சூட்கேசுடன் ஜான்னவி.

''ஸ்ஸ்... அப்பா... திருச்சிலேர்ந்து பஸ்ல வர்றேன். வெயில் என்ன இப்படிக் கொளுத்துது..... பசிவேற வயித்தைப் பிடுங்குது.''

சூட்கேஸைத் தன் படுக்கை மேல் எறிந்து விட்டு பாத்ரூமுக்குப் போனாள்.

சந்தன சோப் வாசனை மணக்க ஜான்னவி வெளியே வந்தபோது கலாவதி அழுகையை விழுங்கியிருந்தாள். கண்ணைத் துடைத்துக் கொண்டு சாதாரணமாகப் படுக்கையில் கவிழ்ந்து கதைப் புத்தகம் வாசித்துக் கொண்டிருந்தாள்.

''லஞ்ச் சாப்பிட்டாயா கலா!'' ஜான்னவி ஸ்லிப்பரை மாற்றிக் கொண்டு சாப்பிட விரைந்தாள்.

''...ம்ம்... ஆச்சு.''

ஜான்னவி சாப்பிட்டுவிட்டு வந்ததும் கதவைத் தாழிட்டாள். வழக்கத்திற்கு மாறாகக் கலாவதியின் கட்டிலில் வந்து பக்கத்தில் படுத்துக் கொண்டாள்.

கலாவதியின் இடுப்பைச் சுற்றிக் கையை வளைத்தாள். அவள் முகத்தைத் தன் பக்கம் திருப்பிக் கொண்டு மிருதுவாக ''கலாவதி.. வாட்ஸ் யுவர் பிராப்ளம்?'' என்றதும் கலாவதி திடுக்கிட்டுப் போனாள்.

இவள் கண்ணிலிருந்து எதுவுமே தப்பாதோ! என்ன என்று சொல்வது...? முகத்தைத் தலைகாணியில் புதைத்துக் கொண்டாள்.

கலாவதி தட்டுத்தடுமாறி ''பிரச்னைன்னு ஏதும் இல்ல'' என்றாள்.

ஜான்னவி அவளை நேர்ப் பார்வை பார்த்தாள். தலையை நீவினாள். ''லுக் சைல்ட்... நீ இன்னைக்கு அழுதியா இல்லையா? ஏன் இப்படி லீவு போட்டுட்டு ரூம்ல அடைஞ்சு கிடக்கிறே? ஊர்ல ஏதாவது பிரச்னையா? இல்லே ஆபீஸ்ல பிராப்ளமா...? என்னன்னு சொல்லு. வீ வில் சால்வ் இட்.''

கலாவதி ஏதும் பேசாமல் மௌனமாக அழ ஆரம்பித்தாள். ''நீ இப்ப அழறது எனக்குத் தெரிஞ்சு மூணாவது தடவை. முதல் முதல்ல டிரெயின்ல ஏறி வண்டி நகர்ந்த இரண்டாவது நிமிஷம் அழுதே... ஆனா உடனே சமாளிச்சுக்கிட்டே. சின்னப் பொண்ணு. ஊரை விட்டு, வீட்டை விட்டுட்டுத் தனியாப் போறதுனால அழுதேன்னு வச்சுக்கலாம்.

''அப்புறம் இரண்டாவது தடவை இங்கே ஹாஸ்டலுக்கு வரணும்னு கேட்டுக்கிட்டு வந்தப்ப வருத்தப்பட்டே... அவங்க வீட்ல இல்ட்ரீட் பண்ணினாங்கன்னு புரிஞ்சுக்கிட்டேன்.

''இப்ப நீ ஹாப்பியா இருக்கே. ஆபீசுக்கு சூட்டனா போயிட்டு வர்றே... ஊருக்கும் வேண்டியப்ப போறே... சினிமாக்குப் போறே. லைஃப் நிம்மதியா ஓடுது... இதுல நடுவுல இப்படி வந்து கவுந்துக்கிட்டு அழணும்னா ஸம்திங் ராங்க்... சொல்லு என்னால முடிஞ்ச ஹெல்ப் பண்றேன். உனக்கு வேறே க்ளோஸ் ஃப்ரெண்டு யாரு மில்லைன்னு தெரியும்.''

கலாவதி கலக்கமாக ஜான்னவியின் கையைப் பற்றித் தன் கைக்குள் வைத்துக்

# திடமான வலிவு, நாளெல்லாம் துடியான பொலிவு.

புதிய நியூட்ரமுல்—தாயின் கனவு பலித்தது இதிலே: சாக்கலேட் சுவைக் கோக்கோ, ஏடுகட்டின பால், பொன்னிற மால்ட் யாவும் நிறைந்ததாய், வலுவூட்டும் புரதச் சத்துக்களோடு அத்தியாவசிய வைட்டமின்களையும் வழங்குகிறது. நாள்தோறும் நியூட்ரமுல், உங்கள் குழந்தைகளுக்கு திடமான உடல் பலம், துடியான மனோபலம். இதுவே உற்சாகத்தின் உச்சியிலே அவர்களை விளங்க வைக்கும் கூடுதல் தெம்பு.

நியூட்ரமுல் பருகப் பருகப் பலம் பெருகும் பெருகும்.

அமுல் படைப்பு

## நியூட்ரமுல்

முழுமொத்த திடவலிமைப் பானம்.




daCunha/NML/5/88 TAM

கொண்டாள்.

கண்கள் கழிவிரக்கத்தில் கடகடவென்று கொட்டின. ''ஒரு விதத்துல ஏமாந்துட்டேன்... அந்த ஏமாத்தம் தாங்க முடியலே... அதான் ஆபீஸ்லேர்ந்து வந்துட்டேன்'' என்றாள்.

ஜான்னவி சில வினாடிகள் மௌனத்திற்குப் பின்... ''யாரு அவன்... எவ்வளவு தூரப் பழக்கம்?'' என்றாள் பளிச்சென்று.

கலாவதிக்கு வெட்கமாக இருந்தது. எப்படிப் புரிந்து கொண்டாள் இவள்?

சேகரைப் பற்றிச் சொன்னாள். ஆபீஸில் தவறாமல் பேசுவதை, டான்ஸ் பார்க்க அழைத்துப் போனதைச் சொன்னாள். கடைசியாக இன்று பேசியவரைச் சொல்ல, ஜான்னவி சாந்தமாக ஜன்னலுக்கு வெளியே வெறித்தபடி கேட்டுக் கொண்டாள். முடிவில்...

''கலாவதி... முதல்ல ஒரு விஷயத்துல தீர்மானமா இரு.. நீ தப்பு ஏதும் பண்ணலை. மனுஷங்களோட பழகும் போது எதிர்பார்ப்புகள் மளமளன்னு வளர்ந்திடுது. அது ரொம்ப சகஜம். அதிலயும் உன் வயசு. அனுபவமின்மையை வச்சுப் பார்க்கறப்போ சாத்தியம் இன்னும் அதிகம் தான். அதனால் கில்ட்டியா ஃபீல் பண்ணாதே.

ஒரு விதத்துல உன் ஃப்ரெண்டு நல்லவன் தான். பட்டுன்னு இப்பவே சொல்லிட்டாம் பாரு. அவன் சகஜமாப் பழகற நேச்சர் உடையவன்னு நினைக்கறேன். ஆனாலும் இந்த மாதிரிப் பழக்கம் உனக்குப் புதுசானதால உனக்குள்ள இது எந்தப் பாதிப்புக்களை ஏற்படுத்தும்னு அவன் முன்னாடியே யோசிச்சிருக்கலாம்.''

ஜான்னவி கலாவதியின் விரல்களைப் பற்றி மென்மையாக நீவி விட்டாள். ''மறந்துரு கலாவதி. ஜஸ்ட் ஃபர்கெட் இட். உனக்கு ஒண்ணே ஒண்ணு சொல்லணும் போல இருக்கு. கேப்பியா?''

''சொல்லுங்க.''

''என்றைக்கும் யாரைப் பத்தியும் எதிர்பார்ப்புக்களை வளர்த்துக்காதே. முன்னாடி வளர்த்திருந்தா... அழிச்சுடு... நம்ம எதிர்பார்ப்புக்கள் பொய்யாகும்போது ஏமாத்தம் பெரிய சோகமா மாறி நம்மையே அழுத்துது... யாரையும் மனசளவில கூடச் சார்ந்திருக்காம, எதிர்பார்ப்புகள் அப்படிங்கற சிக்கல்கள்ள மாட்டிக்காம, நம்ம போக்குல இருக்கிறதுதான் மிகப் பெரிய சுதந்திரம்... உன்னை நீயே அந்த வழிக்கு மாத்திக்கப் பாரு.''

ஜான்னவி இதே ரீதியில் பேசிக் கொண்டு மெதுவாக ஒரு குழந்தையைப் போல் உறங்கிப் போனாள்...

நிஜம்தான் போலிருக்கு... கலாவதி யோசித்தாள். அப்பா என்கிற ஆண் பிள்ளையிடம் ஒரு நல்ல குடும்பத் தலைவனுக்குரிய பொறுப்பை, பாசத்தைப் பற்றிய எதிர்பார்ப்புக்களை வைத்திருந்தேன். நொறுக்கி விட்டார்... அப்புறம் செங்கம்மாவிடம் அம்மாவின் தோழி. அதனால் அம்மாவைப் போலவே நிஜமான பிரியத்தோடு இருப்பாள். என்று நம்பிக்கையை, எதிர்பார்ப்புக்களை மடத்தனமாகத் தேக்கி வைத்திருந்து ஏமாந்து போனேன். கடைசியாக, சேகரைக் குறித்த ஆதாரமில்லாத நம்பிக்கைகள் ஜான்னவி சொன்ன மாதிரி என் சுபாவம்தான் என் துயரத்திற்குக் காரணமாயிருக்கிறது.

அவள் தன் மனச்சிறையைக் கிழித்தெறிந்து வெளியே வரும் வழியில் அந்த நிமிஷங்களில் புரிந்து கொண்டாள்.

---

பனிக்காலம் ஆரம்பமாகிவிட்டது. பித்த வெடிப்பு அதிகமாகத் தோன்றக் கூடிய காலம் இது. வெடிப்பினால் அவதிப்படுபவர்களுக்கு ஓர் எளிய மருந்து— மெழுகுவர்த்தியைச் சீவி, தூள் செய்து கொண்டு தேங்காய் எண்ணெயுடன் கலந்து விடுங்கள். இந்தக் கலவையை நெருப்பில் காட்டிச் சூடேற்றுங்கள்: மெழுகு உருகி லேகியம் போல் வரும். அப்போது அதை நன்றாகக் கிளறி எடுத்து வைத்து வெடிப்பின் மீது தடவி வாருங்கள். வெடிப்பு குணமாகிவிடும். முக்கியமாகக் கால் கீழே ஊன்ற முடியாமலிருக்கும் வலி நீங்கிவிடும்.

— அனுஜய்.

---

நவம்பர் மங்கையர் மலர் இதழில் வந்துள்ள அதிரஸம் செய்யும் முறை சரியாக உள்ளது. தெளிவாகவும் உள்ளது. அதில் ஒரு திருத்தம் சொல்ல விரும்புகிறேன். அனுபவமின்றிப் புதிதாகச் செய்பவர்களுக்கு உதவியாக இருக்கும். அரிசி மாவை ஒரு பாத்திரத்தில் வைத்துக் கொண்டு பதமான பாகை அதில் ஊற்றிக் கிளற வேண்டும். அப்போதுதான் சிறிது பாகு மிகுதியானாலும் நிறுத்திவிடலாம். வெல்லத்தில் கரைந்துள்ள மண் அழுக்குகள் அடியில் தங்கிவிடும். பாகு உள்ள பாத்திரத்திலேயே மாவைக் கொட்டிக் கிளறினால் சில நேரம் உடனே தட்ட வராத இளகலாகி விட்டால் மறுபடி மாவு இடிக்க நேரமின்றித் திண்டாட வேண்டி வரும்.

— பங்கஜம்.



# சிக்கன விலையில் உயர்தரம்

# ஏபிடி -யின் ஏப்டெல்

## வெட் கிரைண்டர்கள்

கேட்லாக் விற்பனை முறையில் விற்கப்படுகிறது

- விற்பனைக்குப் பின் உடனடி சேவை (48 மணி நேரத்திற்குள்)
- சாய்வு வகை, மற்றும் நேர்வகை
- சாய்வு வகையில் உலர் அரவை
- அதிக திறன் - மற்றும் சக்தி வாய்ந்த ஏப்டெல் மோட்டாரை கொண்டது
- பல்வேறு அளவுகளிலும் வண்ணங்களிலும் கிடைக்கிறது

தமிழகமெங்கும் ஒரே விலை

தமிழகமெங்கும் இலவச டோர்-டெலிவரி

மூன்று வருட கியாரண்டி




விபரங்களுக்கு உங்கள் அருகாமையில் உள்ள ஏபிடி பார்சல் சர்வீஸ் ஏஜெண்ட்டை அணுகவும் அல்லது ஏபிடி எலக்ட்ரானிக்ஸ், 662, அவினாசி ரோடு, கோயம்புத்தூர்-641 037 என்ற முகவரிக்கு எழுதவும்.

பெயர் : ------------------------------------------------------------

முகவரி : ------------------------------------------------------------

Mm



'கெட்டி மேளம், கெட்டி மேளம்' என்ற சப்தத்துடன் மணமகன் மணமகளின் கழுத்தில் தாலியைக் கட்டுகிறார். பெண்ணைப் பெற்றவர் இத்தனை நாள் தான் தாங்கி வந்த சுமையை இறக்கி வைத்து விட்டு அந்த சுமையை ஏற்றுக் கொள்ள இன்னொருத்தர் வந்து விட்டதாக நினைத்து சந்தோஷப்படுகிறார். அவர் வாழ்க்கையின் பெரும் பகுதியை பெண்ணைத் திருமணம் செய்து கொடுப்பதற்காக சேமிப்பதிலும், திருமணம் செய்து கொடுத்த பிறகு ஏற்படும் செலவுகளையும், கடன்களையும் அடைக்கவுமே கழிக்கிறார்.



இவ்வளவு தூரம் கஷ்டப்பட்டு செலவு செய்த பெண்ணாவது சந்தோஷமாக இருக்கிறாளா?

அதுவும் இல்லை. கணவன் மனைவிக்குள் மனஸ்தாபங்கள் அவர்களை சந்தோஷமாக வாழ விடாமல் தடுக்கின்றன.

எப்படியோ தள்ளிக் கொண்டு ஓட்டிச் செல்லும் கார் ஒருநாள் அடியோடு நகர மறுப்பது போல எப்படியோ ஓடிக் கொண்டிருந்த அவர்களது திருமண வாழ்க்கை திடீரென்று ஆட்டம் காண்கிறது. கணவன் சின்ன வீடு வைத்துக் கொள்கிறான். அல்லது மற்ற பெண்களோடு தொடர்பு வைத்துக் கொள்ள விரும்புகிறான். அல்லது சூதாட்டம், மது என்று பிற கேளிக்கைகளில் அதிக நேரம் ஈடுபட்டு இரவு வீட்டில் இருக்கும் நேரத்தைக் குறைத்துக் கொள்கிறான்.

உலகமெங்கிலும் திருமணமான பிறகு ஏழாவது வருடத்தில் அவர்களுக்குள் அபிப்பிராய பேதங்கள் ஏற்படுகின்றன. அவர்களுடைய வாழ்க்கை அலுத்துப் போகிறது என்ற கருத்து நிலவுகிறது. இதை ஆங்கிலத்தில் 'செவன் இயர் இட்ச்' என்று சொல்வார்கள்.

இந்த 'இட்ச்'சின் அடையாளம் கணவன் மனைவிக்குள் 'இச்' குறைந்து போவது.

கணவனிடம் இந்த மாற்றங்கள் ஏற்பட என்ன காரணங்கள்?

**எதிர்பார்ப்புகள்:**

கணவன் மனைவியிடம் ஒரு சில எதிர்பார்ப்புகளையும் அதே மாதிரி மனைவி கணவனிடம் ஒரு சிலவற்றையும் எதிர்பார்த்திருக்கலாம். அது முற்றிலும் நடக்காத போது அவர்களுடைய ஆழ்ந்த ஆசைகள்

# கணவன் மனைவியைப் பிரிவதேன்?

தவிடு பொடியாக ஆக்கப்பட்டு தரை மட்டமாகின்றன. அதனால் ஏற்பட்ட அதிர்ச்சி அவர்களுடைய ஆழ் மனத்தில் இருக்கின்றன.

ஒருவர் மற்றொருவரிடம் பேசும் போது காரணமே இல்லாமல் எரிச்சலான வார்த்தைகளும் வெறுப்பான வார்த்தைகளுமே பரிமாறிக் கொள்ளப்படுகின்றன. இந்த மாதிரி நிகழக் காரணம் கணவன் மனைவியினுடைய எதிர்பார்ப்புகள் நடக்காமல் போனதே காரணம் என்கிறார் டாக்டர் வாசுதியான் என்ற மனோதத்துவ நிபுணர்.

"நான் சம்பாதிக்கிறேன்.. நான் குடும்பத்தைக் கவனிக்கிறேன்.. எல்லா சுமைகளையும் தாங்கிக் கொள்கிறேன். எனக்கென்று என்ன சுகம் வீட்டில் கிடைக்கிறது? அதனால் சுகம் எங்கே? சுகம் எங்கே?" என்று வீட்டில் கிடைக்காத சுகத்தை வெளியே தேடச் செல்கிறான் கணவன் என்கிறார் டாக்டர் சிங்கர் என்ற இன்னொரு மனோதத்துவ நிபுணர்.

அவன் வெளியில் சுகத்தைத் தேடுவதன் காரணம் அவனுக்கு ஏற்பட்ட தாழ்வு மனப்பான்மையின் காரணமாக இருக்கலாம். ஐய்யோ வயதாகி வருகிறதே. இன்னும் கொஞ்ச நாளில் தாத்தாவாகிப் போய் விடப் போகிறோமே... எவ்வளவோ வாழ்க்கையில் சாதிக்க வேண்டும் என்று நினைத்தோமே, அதில் பத்தில் ஒரு பங்கைக் கூட சாதிக்க முடியவில்லையே... என்ற கவலைகளை எல்லாம் மறக்க, புதிய மனிதனாக, உற்சாகத்துடன் வெற்றியுடன் வாழ்க்கையை நடத்துபவன் போல வெளியில் காண்பித்துக் கொள்ள, கணவன் மற்ற பெண்களை நாடுகிறான்.

வாழ்க்கையின் நடுப் பகுதியில் குழந்தைகள் வளர்ந்து வரும் போது கணவன் மனைவியினுடைய பேச்சுக்கள் பெரும்பாலும் குழந்தைகளுக்கு என்ன வாங்குவது? அவர்களுடைய எதிர்காலத்திற்கு எப்படி சேமிப்பது, எப்படி வீடு கட்டுவது? என்பது போன்ற பணம் சம்பந்தப்பட்ட, படிப்பு சம்பந்தப்பட்ட, வேலை சம்பந்தப்பட்ட பேச்சுக்களாகவே இருப்பதால் கணவனின் உணர்வு சம்பந்தப்பட்ட பேச்சுக்களுக்கு நேரமே இல்லாமல் கணவனுக்கு மனைவியிடம் ஒரு வெறுமை தோன்றுகிறது. அந்த வெறுமையை நிறைவாக்க, அவனுடைய மன உணர்வுகளுக்கு வடிகால் கிடைக்க இன்னொருத்தியை நாடிப் போகிறான். அவன் சென்ற இடத்திலும் அவனுக்கு அது கிடைக்காமல் போகலாம். அது வேறு விஷயம். ஆனால் தன்னுடைய வீட்டில் அவனுக்குக் கிடைக்காத ஒன்று இன்னொருத்தியிடமாவது கிடைக்குமா என்றுதான் தேடிப் போகிறான்.

விமலாவின் கணவன் பிரசாத்துக்கு வாழ்க்கையில் இன்னும் முன்னேற வேண்டும், இன்னும் கவர்ச்சிகரமாகத் தோற்றமளிக்க வேண்டும் என்ற அசாத்திய ஆசை. சாதாரண நடுத்தரக் குடும்பத்தில் பிறந்த அவன், பணப் பஞ்சத்தால் ஏற்படும் கஷ்டங்களை நன்றாக அறிந்தவன். அதனால் எப்படியாவது கஷ்டப்பட்டு வாழ்க்கையில் ஒரு உன்னத நிலைமையை அடைய வேண்டும் என்பது அவனுடைய லட்சியம். இது அவனுடைய மனைவி விமலாவுக்கும் நன்றாகத் தெரியும். அவனுடைய எண்ணங்கள் சதா அவனுடைய எதிர்காலத்தைப் பற்றியே இருக்கும். அதனால் அவன் விமலாவிடம் அவளது அழகைப் பாராட்டியோ, அவள் உடுத்தி இருக்கும் உடையைப் பாராட்டியோ, அவள் செய்து வைக்கும் சமையலைப் பற்றியோ ஒரு வார்த்தை பாராட்டிப் பேச மாட்டான். இப்படி எல்லாம் நடந்து கொள்வது அவளுடைய கடமை. இதில் பிரத்தியேகமாகப் பாராட்ட என்ன இருக்கிறது என்று நினைத்துக் கொள்வான். அதே சமயத்தில் அவள் மேல் அன்பு உண்டு, மதிப்பு உண்டு, பாசம் உண்டு. ஆனால் அதை வார்த்தைகளால் வெளிப்படுத்த மாட்டான்.

இதுகுறித்து விமலாவுக்கு மிகவும் வருத்தம். இந்த வருத்தத்தினால் அவள் அவனுடைய ஆர்வத்தை, தன்னம்பிக்கையைத் தூண்டி விட்டு, அவனுடைய லட்சியத்தை அடைய, அவனை உற்சாகப்படுத்த மாட்டாள். இங்கேயும் மன உணர்வுகளுக்கு இடையே இடைவெளி. ஒவ்வொருவரும் தங்களுடைய மன உணர்வுகளை தங்களிடமே வைத்துக் கொண்டு அவதிப்படுகிறார்கள். அதை வெளிப்படையாக எடுத்துச் சொல்லி நிலைமையைச் சரி செய்து கொள்ள ஏதோ ஒன்று அவர்களைத் தடுக்கிறது! அது என்ன?

இது கூட அவளுக்கோ அவருக்கோ தெரியாதா' என்ற எண்ணமோ அல்லது

ஒரு வாழைப் பழத்துடன், இரண்டு ஸ்லைஸ் ஸ்வீட் பிரட்டையும், இரண்டு ஸ்பூன் சர்க்கரையையும் சேர்த்து, பிசைந்து, சப்பாத்திகளுக்கு நடுவில் வைத்து குழந்தைகளுக்கு டிபன் பாக்ஸில் கொடுத்தனுப்புங்கள். சத்துள்ளதோடு, செய்வதும் சுலபம்.

— உமா.



அவரிடமோ அல்லது அவளிடமோ நான் போய் 'என்னைப் பாராட்டு' என்று கேட்பது ஏதோ பிச்சைக் கேட்பது போல் இருக்கிறது என்ற உணர்வாகவும் இருக்கலாம். ஆனால் இது போனற உணர்ச்சிகளை அடக்கி வைப்பதால் இருவரிடையேயும் பிரிவு ஏற்படுகிறது. பிரிவு ஏற்படக் காரணம் அடக்கி வைக்கப்படும உணர்ச்சி, பல சமயங்களில் கோபமான வார்த்தைகளால் வெளிப்படுவதுதான். எந்த நேரமும் திட்டிக் கொண்டே குறை சொல்லிக் கொண்டே இருக்கும் மனைவியிடம் இருந்து விலகவே கணவன் நினைப்பான்.

கணவன் மனைவியிடையே நெருங்கிய மன உறவு இல்லாமல் மற்றபடி சுமுகமான சூழ்நிலையும் நிலவலாம். ஒரு காலத்தில் கணவனிடம் எல்லா விஷயங்களையும் பகிர்ந்து கொள்ளத் துடித்த மனைவி அவனிடம் ஏற்பட்ட வெறுப்பால் அவன் அவனுடன் தன்னுடைய மன உணர்வுகளைப் பகிர்ந்து கொள்ள தயங்குகிறாள். ஏதோ ஒரு அன்னியனை நெருங்கிய நண்பனாக ஆக்கிக் கொள்ள முயற்சி செய்வது போல் நினைக்கிறாள்.

சில சமயங்களில் மனைவி கணவனிடம் அதிக அளவு நெருக்கமாக பழக ஆரம்பித்தாலும் கணவன் அவளிடம் இருந்து விலக விரும்புகிறான். அவளுடைய நெருக்கம், 'ஏதோ அவள் கேட்பதற்காகவே நமக்கு 'ஐஸ்' வைக்கிறாள் என்று அவன் நினைக்கிறான். அந்தத் தேவையை அவனால் சமாளிக்க முடியாத நிலைமை வருமோ என்று பயப்படுகிறான். அதனாலும் அவளை விட்டு விலக விரும்புகிறான் என்கிறார் டாக்டர் சிங்கர்.

கணவன் மனைவியைப் பிரிந்து போவது என்பது திடீரென்று ஒரு நாளில் ஒரு நிமிடத்தில் எடுத்த தீர்மானத்தினால் அல்ல. அதன் ஆரம்பம் எத்தனையோ வருடங்களுக்கு முன்பிருக்கும். வழக்கமாக மனைவியிடம் குறை கண்டுக் கொண்டிருந்த கணவன் அவளிடம் குறை காண்பதை நிறுத்தி விடுவான். சில சமயங்களில் அவளைப் பிரியப் போவது அவனுக்குத் தெரியுமாகையால் அந்தக் குற்ற உணர்வை சரிப்படுத்த அவளிடம் வழக்கத்திற்கு விரோதமாக திடீரென்று சுமுகமாக நடந்து கொள்ள ஆரம்பிப்பான். அவளுக்குப் புடவை நகைகள் கூட பரிசளிப்பான். அவனுடைய செய்கைகள் அவனுடைய மனைவிக்குப் புதிராக இருக்கும்.

கணவன் மனைவியைப் பிரியப் போகிறான் என்பதற்கு அறிகுறிகள். திடீரென்று அவனுடைய உடைகளில் மாற்றம் — தோற்றத்தில் மாற்றம் — அதிக கவனம் — நரையை மறைக்க சாயம் — வெளியில் போகும் போது வழக்கம் இல்லாமல் செண்ட் உபயோகிப்பது — ஆகாரத்தில் அதிக கவனம் — திடீரென்று ஷட்டில் போன்ற விளையாட்டுக்களில் ஆர்வம் — உபயோகப்படுத்தும் வாகனங்களின் புறத் தோற்றத்தில் அதிக அக்கறை — இதெல்லாம் மனைவி கணவனிடம் சந்தேகப்பட வேண்டிய அறிகுறிகள். 'மனைவியை விட்டு விலகப் போகும் கணவனிடம் 'சுய முன்னேற்றம்' பல வழிகளிலும் காணப்படும் என்கிறார்கள் மனோதத்துவ நிபுணர்கள்.

இதைத் தவிர்க்க என்ன செய்வது?

முதலில் திருமணம் என்பது மாறுதல்களுக்கு உட்பட்டது என்பதை அனைவரும் புரிந்து கொள்ள வேண்டும். குறிப்பாக மனைவி. கணவன் மனைவியின் உறவு மாதத்திற்கு மாதம், வருடத்திற்கு வருடம், சூழ்நிலைக்கேற்ப மாறுபடக் கூடியது என்பதை* உணர வேண்டும். அதற்குத் தகுந்தாற் போல மனைவி தன்னை சரி செய்து கொள்வது பெரும்பாலான குடும்பப் பிரச்னைகளைக் காக்கும்.

ஆரம்பத்தில் மனைவியால் கிடைக்கும் உடல் உறவினால் கணவனுக்கு சந்தோஷம் கிடைக்கலாம். நாளாக நாளாக அதில் அவனுக்குக் கிடைத்து வந்த சந்தோஷத்தைக் காட்டிலும், அவனுடைய மன உணர்வுகளுக்கு சந்தோஷத்தைத் தரக் கூடிய நபராகத் தன்னுடைய மனைவி இருப்பாளா என்று ஏங்குகிறாள். எந்த மனைவி கணவனுடைய மன உணர்வுகளுக்கு ஆறுதலைத் தருகிறாளோ அவர்களது வாழ்க்கையே இறுதி வரை சந்தோஷமானதாக இருக்கிறது.

'தாய்க்குப் பின் தாரம்' என்று சொல்வதில் புரிந்து கொள்ளாத வேறு பல அர்த்தங்களும் இருக்கின்றன. தாயிடம் ஒரு மகன் தன்னுடைய குறைகளைச் சொல்லி ஆறுதல் பெறுகிறான். தாயின் அரவணைப்பு அவனுக்கு நம்பிக்கையையும் உற்சாகத்தையும் கொடுக்கிறது. தனக்கு எது நேர்ந்தாலும் தன்னுடைய தாய் தன்னைக் காப்பாள் என்ற ஆழ்ந்த நம்பிக்கையை ஏற்படுத்துகிறது. இதே போன்ற நம்பிக்கையை, அரவணைப்பை, மன ஆறுதலை மனைவி தர வேண்டும். இதைத்தான் கணவன் பெரும்பாலும் மனைவியிடம் எதிர்பார்த்து கிடைக்காமல் ஏமாறுகிறான் — மனம் வருந்துகிறான். மனைவி சில சமயங்களில் தாயின் ஸ்தானத்தையும் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்பதைத்தான் அந்தப் பழமொழி உணர்த்துகிறது.

# மங்கையரின் மலரும் நாகரிகம்!

அனைத்து
ரகங்களுக்கும்
20%
பொங்கல்
சிறப்புத்
தள்ளுபடி



## ஹேண்ட்லூம் ஹவுஸ்

(முழுவதும் ஏர் கண்டிஷன்) மத்திய அரசு ஆதரவு பெற்றது.
7, ரத்தன் பஜார், சென்னை 600 003.
134, பேலஸ் ரோடு (LIC பில்டிங்) மதுரை 625 001.
101-C திவான் பகதூர் ரோடு, R.S. புரம், கோயம்புத்தூர் 641 002.
ஞாயிறு, விடுமுறை தினங்களிலும் விற்பனை உண்டு.

CANCO/545

மத்திய அரசு ஊழியர்களுக்குக் கடன் வசதி உண்டு

கணவனின் மனத்தோடு ஒன்றுபட பெண்களுக்குத் தேவையானது — மிக முக்கியமானது — ரசனை. இதற்குக் காசு பணம் செலவழிக்க வேண்டாம். அதிக படிப்பு கூட அவசியமில்லை. கணவனது மனத்தோடு ஒன்றுபட மிகச் சுலபமான வழி இதுதான்: கணவனுக்கு விளையாட்டில் — இலக்கியத்தில் — இசையில் — சினிமாவில் அதிக ஆர்வம் இருக்கலாம். தான் பார்த்தவற்றை, படித்தவற்றை தன்னோடு மனைவியோடு பகிர்ந்து கொண்டு அதில் இருந்து கிடைக்கும் சந்தோஷத்தைப் பெற விரும்புகிறான். அந்தச் சமயத்தில் அவள் அதில் அக்கறை காட்டாத போது அவனுடைய ஆர்வம் அப்படியே தடைபட்டுப் போகிறது. அவனுடைய எண்ணங்களுக்கு ஒரு வடிகால் இல்லை. அப்படியே மௌனமாகிப் போய் விடுகிறான்.

சாதாரணமாக அவன் பேச விரும்பும் ஒரு விஷயத்தைக் காது கொடுத்துக் கேட்க விரும்பாத மனைவியிடம் மறுபடியும் பேசவே அவனுக்குக் கசக்கிறது. அப்படிப்பட்ட, அடக்கி வைக்கப்பட்ட மன உணர்வுகளைப் பகிர்ந்துக் கொள்ள ஒரு நபர் — குறிப்பாக இன்னொரு பெண் — கிடைக்கும் போது அவனுக்கு அலாதி சந்தோஷம் ஏற்பட்டு அவளிடம் மனம் நாடுகிறது. இந்த மன உணர்வு பரிமாற்றம் மிகவும் உயர்ந்த நிலை அறிவு விஷயங்களைக் குறித்த அல்லது சாதாரண விஷயங்களைக் குறித்த பரிமாற்றங்களாகவும் இருக்கலாம். ஆனால் பரிமாற்றம் கணவனுக்கு ஒரு அலாதி திருப்தியைத் தருகிறது. மனைவியை விட அழகு குறைந்த பெண்ணிடம் கணவன் தொடர்பு வைத்திருப்பதற்கு இதுவே முக்கியமான காரணமாக இருக்கும். எத்தனையோ ஏழைக் குடும்பத்து கணவன் மனைவியர் அவ்வளவு அன்னியோன்யமாக இருக்க அவர்களுக்குள் இருக்கும் ரசிகத் தன்மையே காரணம்.

மனைவி தன்னுடைய கடமைகளை மாத்திரம் செய்தால் போதாது. அவளும் வேலைக்குப் போகலாம். அவளுக்கும் அசதி இருக்கலாம். இருந்தாலும் அவள் தனது குழந்தைகளை ஒதுக்குவது இல்லை. அவர்களுடைய சந்தோஷத்தில் அக்கறை காட்டுகிறாள். அதே போல கணவனையும் சந்தோஷமாக வைத்திருக்க அவள் முயற்சி செய்ய வேண்டும். அவளுடைய புறத்தோற்றங்கள், அவளுடைய வார்த்தைகளின் தொனி, அவள் அவனுடைய தேவைகளைக் கவனிக்கும் பாங்கு இவற்றில் எல்லாம் 'நீங்கள் எங்களுக்கு மிகவும் பிரியப்பட்டவர்.. உங்களுடைய சந்தோஷமும், மன ஆரோக்கியமும், உடல் ஆரோக்கியமும் உயர்வும் எங்களுடைய வளர்ச்சிக்கும் வாழ்வுக்கும் என்றும் தேவை' என்று அவள் வெளிப்படையாக அவனை உணரச் செய்தால், அவன் என்றும் அவளை விட்டுப் பிரிய மாட்டான்.

பெண்ணினுடைய கடைக்கண் பார்வை கிடைத்தால் ஆண்கள் சாதிக்க முடியாத காரியங்களைச் செய்ததாக இலக்கியம் கூறுவது பெண்ணினுடைய அழகினால் மயங்கி அவன் செய்தது அல்ல. அவளது கடைக்கண் பார்வை கொடுத்த உற்சாகம் அவ்வளவு சக்தி வாய்ந்தது. வெற்றி பெற்ற எந்த ஆணுக்குப் பின்னாலும் ஒரு பெண் இருக்கிறாள் என்று சொல்கிறார்களே அது எவ்வளவு உண்மை! அவன் வெற்றி அடைய அவள் கொடுத்த உற்சாகமே — அவனுடைய மனதுக்கு அவள் கொடுத்த சந்தோஷமே அவனுடைய வெற்றிகளுக்குக் காரணம்.

— கமலநாதன்

இரண்டு டம்ளர் கரும்புச் சாற்றில், ஒரு துண்டு வாழைப் பழத்தை மசித்துப் போட்டு அடுப்பில் வைக்கவும். பின் சிறிது உப்புப் போட்டு, ஐம்பது கிராம் நாட்டுச் சர்க்கரையைப் போட்டு, கொதி வந்ததும், இரண்டு ஸ்பூன் அரிசி மாவைக் கரைத்துக் கொட்டி, கொதி வந்ததும், கீழே இறக்கி நெய்யில் கடுகு, ஒரு மிளகாய் வற்றல் தாளித்துக் கொட்டி விடவும். இந்தப் பச்சடியைக் கெட்டியாக இலையில் எடுத்து வைத்து சாப்பிட பிரமாதமாக இருக்கும்.

— உமா.

## முகப் பவுடரும் கறுப்பாக்கலாம்

சில சமயங்களில் சிலருக்குக் கழுத்தில் நகை போட்டுக் கொள்ளும் இடத்தில் கறுப்பாக கறையாக இருக்கும்.

இதற்கு முகப்பவுடர் காரணமாக இருக்கலாம் என்கிறார்கள் சருமநோய் நிபுணர்கள்.

அனேகமாக எல்லா முகப்பவுடர்களிலும் 'ஜிங்க் ஆக்சைட்' என்ற உலோகம் நுண்ணிய அணுக்களாகக் கலக்கப்படுகிறது. இது, நகைகளில் இருக்கும் மிருதுவான உலோகங்களில் உரசி, தேய்த்து, சருமத்தில் கறையாகப் படியச் செய்கிறது.

கழுத்தில் பவுடர் போட்டுக் கொள்ளாமல் இருந்து பார்க்கலாம்.

— ஜெயா.

கூந்தல் பராமரிப்பில்
ஒரு புதிய கருத்து !

# ஸன்னி ஆர்னிகா ஷாம்பு

**எக்ஸ்ட்ரா கண்டிஷனருடன்.**

**உங்கள் கூந்தலைச் சுத்தப்படுத்துவதோடன்றி மேலும் அதிக நலன்களை அளிக்கிறது.**

முன்னணியிலுள்ள ஷாம்பூக்களில் ஸன்னி ஆர்னிகா ஷாம்பூ ஒன்று தான் சுத்தமான இயற்கை மூலிகைகளின் சத்துக்களின் இயல்பறிந்து தயாரிக்கப் படுகிறது. இதனால் கூந்தலின் எழிலும், நலமும் பெருகுகிறது.

ஹோமியோபதியில் வெகுவாக உபயோகிக்கப்படும் ஆர்னிகா, சைனு, கந்தாரிஸ் முதலிய மூலிகைகள் சேர்ந்த ஸன்னி ஆர்னிகா ஷாம்பூ

- சத்துக்கள் மிகுந்த கூந்தல் டானிக்காக செயல்படுகிறது.
- பொடுகையும் தலைமுடி உதிர்வதையும் தவிர்க்கிறது.
- மயிர்க்காலில் புத்துணர்வு ஊட்டுகிறது.
- கூந்தலின் தன்மையையும், பட்டுப்போன்ற பளபளப்பையும் நிலைப்படுத்துகிறது.

ஸன்னி ஆர்னிகா ஷாம்பூ சுத்தமானது, ஃபிரெஞ்சு நறுமணம் கூடியது கூந்தலை வளமாக்கிச் செழிப்புறச் செய்கிறது. ஸன்னி ஆர்னிகா ஷாம்பூ உபயோகித்து உங்கள் கூந்தலை அழகாகவும் இதமாகவும் பராமரியுங்கள்.

---

**இயற்கையான கூந்தல் பராமரிப்பின் பெருமை**
**இணையற்ற ஸன்னி ஆர்னிகாவின் அறிவுடைமை**

---




தயாரிப்பாளர்கள் :
**பக்ஸன் ஹோமியோ பார்மஸி பி. லிட்.**
121 ஓக்லா இண்டஸ்ட்ரியல் ஏரியா,
ஃபேஸ்-1, புது தில்லி-110 020


Nestlé

முதல் பரிசு

## தயிர் பாம்

### பாம் தயாரிக்க:

தேவையான பொருட்கள்:

நல்ல கெட்டியான தயிர் — முக்கால்லிட்டர்
உலர்ந்த பட்டாணி — 1 டேபிள் ஸ்பூன்.
(ஊற வைத்து வேக விடவும்)
பச்சை மிளகாய் — 2 (பொடியாக அரியவும்).
இஞ்சி — 1 துண்டு.
கறிவேப்பிலை — 1 ஸ்பூன் அளவு.
கொத்துமல்லித் தழை — 1 ஸ்பூன் அளவு.
வெங்காயம் — 1 டேபிள் ஸ்பூன்.
பச்சை மிளகாய், இஞ்சி, கறிவேப்பிலை, கொத்துமல்லித் தழை, வெங்காயம் ஆகியவற்றைப் பொடியாக நறுக்கவும்.)
தூள் பெருங்காயம் — 1/4 டீஸ்பூன்.
மிளகாய்த் தூள் — 1/4 டீஸ்பூன்.
கரம் மசாலாத் தூள் — 1/2 டீஸ்பூன்.
முந்திரி — 25 கிராம் (நறுக்கி வறுத்துக் கொள்ளவும்)
ரவை — 2-2 1/2 ஸ்பூன் — தயிர் பதத்தில்.
உருளைக் கிழங்கு — 1/4 கிலோ (வேக வைத்து மசித்துக் கொள்ளவும்)
ரொட்டித் தூள் (அ) அரிசி மாவு — 2 டேபிள் ஸ்பூன்.
ரிபைண்ட் ஆயில் — 1/4 கிலோ.
உப்பு — தேவைக்கேற்ப.

செய்முறை:

கட்டித் தயிரினை ஒரு மஸ்லின் துணியில் போட்டு வடிகட்டி பின் ஒரு மூட்டையாகக் கட்டி இரண்டு மணி நேரம் தொங்க விடவும். நன்கு அமுத்தித் தண்ணீரை வடித்து விடவும். இதனுடன் முந்திரி, வெங்காயம், பெருங்காயம், பச்சை மிளகாய், கறிவேப்பிலை, கொத்துமல்லி, ரவை, உப்பு சேர்த்து, நன்கு பிசைந்து கொள்ளவும். பெரிய நெல்லிக்காய் அளவிற்கு இரண்டு சுற்று பெரிய உருண்டைகளாக பிடித்துக் கொள்ளவும். நடுவில் 1 — 2 பட்டாணியை வைத்து அமுத்திக் கொள்ளவும்.

வேக வைத்த உருளைக்கிழங்குடன் உப்பு, கரம்மசால், மிளகாய்த் தூள், மஞ்சள் தூள் சேர்த்து நன்கு பிசைந்து கொள்ளவும். ஒரு பாலிதின் பேப்பரில் சிறிது எண்ணெய் தடவி ஒரு பெரிய எலுமிச்சையளவு உருளைக் கிழங்கு உருண்டையை வைத்துப் போளி தட்டுவது போல் தட்டி அதன் நடுவில் தயிர்க்கட்டி உருண்டையை வைக்கவும். பேப்பரைச் சுற்றிலும் அமுக்கி தயிர்க் கட்டியை உருளைக் கிழங்கால் முழுதும் மூடி விடவும். பாலிதின் பேப்பரிலிருந்து உருண்டையை எடுத்து ரொட்டித் தூளில் அல்லது அரிசி மாவில் புரட்டி நன்கு சூடான எண்ணெயில் ஒவ்வொன்றாக பொரித்து எடுக்கவும்.

# இம் மாத இல்லத்தரசி



* ஜெயந்தி



* ஆர்த்தி

### குழம்பு தயாரிக்க:

புளி — பெரு நெல்லிக்காய் அளவு — 1/4 லி நீரில் கரைக்கவும்.
கட்டித்தயிர் — 1/2 லி (கடைந்து கொள்ளவும்)
மஞ்சள் தூள் — 1/2 டீஸ்பூன்.
வெல்லம் — 1 டீஸ்பூன்.
தனியா தூள் — 1 டேபிள் ஸ்பூன்.
சிவப்பு மிளகாய் — 4.
வறுத்த தேங்காய்த்தூள் — 1 டேபிள்ஸ்பூன்.
சீரகம் — 1/2 டீஸ்பூன்.
கரம் மசாலா — 1/2 டீஸ்பூன்.
ஏலக்காய் — 1.
பட்டை — சிறுதுண்டு.
கடுகு — 1/2 டீஸ்பூன்.
நெய் — 1 டேபிள் ஸ்பூன்.

தனியா தூள், சிவப்பு மிளகாய், வறுத்த தேங்காய்த் தூள், சீரகம், கரம் மசாலா, ஏலக்காய் ஆகியவற்றை உரலில் போட்டு நைசாக அரைக்கவும்.

* பஜ்ஜி கரகரப்பாய் இருக்க வேண்டுமா? முதல் நாள் அரைத்து வைத்த தோசை மாவில் (புளித்த மாவு) 2 கரண்டி மாவு, துளி ஆப்பசோடா கலந்து கடலை மாவு, கொஞ்சம் அரிசி மாவுடன் சேர்த்துச் செய்தால், பஜ்ஜி சும்மா மொறுமொறுவென அருமையாய் இருக்கும்.

பிரெட் ஸ்லைசுகளை 2, 3 துண்டுகளாக வெட்டி பஜ்ஜி மாவில் தோய்த்து பஜ்ஜி செய்தால் குழந்தைகளும் விரும்பிச் சாப்பிடுவர். சிலருக்கு இது தெரியும். பலருக்கு தெரியாது!

ராமசந்திரசேகர்.

அவசரமாகக் குழம்பு செய்யும் போது வறுத்தரைத்துச் செய்ய நேரமிருப்ப இல்லை. அதனால் 1 கப் தனியாவைக் கொஞ்சமாக எண்ணெய் விட்டு வறுத்து மிக்ஸியில் பொடி செய்து வைத்துக் கொண்டு, அவ்வப்போது ஒரு டேபிள் ஸ்பூன் குழம்பு கொதித்து இறக்கும் போது சேர்த்தால் மிகுந்த வாசனையுடன் வறுத்தரைத்துச் செய்த சாம்பார் போலவே இருக்கும்!

— ராஜலட்சுமி.

செய்முறை:

வாணலியில் நெய் போட்டு கடுகு, ஏலக்காய், பட்டை சேர்த்துப் பொரித்து அரைத்த விழுதைப் போட்டு வதக்கவும். தயிரை ஊற்றி நீர் முழுவதும் வற்ற விடவும். பின்னர் புளிநீர், வெல்லம், மஞ்சள் தூள் சேர்க்கவும். சுவைக்கேற்ப உப்பு சேர்க்கவும். நெய் மிதக்கும் வரை கொதிக்க வைத்து இறக்கவும். குழம்பினைச் சற்று அகலமான பாத்திரத்தில் ஊற்றி வைக்கவும். இதில் தயிர் பாம்களைப் பரிமாறுவதற்குச் சில நிமிடங்கள் முன்பு போடவும். லேசாகக் கலக்கவும். கொத்துமல்லி இலை, கேரட் துருவல் சேர்த்து அலங்கரிக்கவும். இது சாதம், சப்பாத்தி, பூரி, நான், பரோட்டா வகைகளுக்குத் தொட்டுக் கொள்ள மிக நன்றாக இருக்கும். சுடச்சுட தயிர் பாமைக் குழம்புடன் சேர்க்காமல் தக்காளி, சில்லி சாஸுடன் சாப்பிட மிகச் சுவையாக இருக்கும். மையப் பகுதி வெண்ணெய் போன்று மிருதுவாகவும் வாயில் போட்டால் கரையும்படியாக இருக்கும்.

— ராஜலக்ஷ்மி, கோபிசெட்டிபாளையம்.

## இரண்டாம் பரிசு

### ஆலூ கர்ட்

தயிர் — ¼ லிட்டர்,
உருளைக் கிழங்கு — ¼ கிலோ,
சோயாபீன்ஸ் — 1 டேபிள் ஸ்பூன்,
கொப்பரை — 1 டேபிள் ஸ்பூன்,
பெரிய வெங்காயம் — 2,
பூண்டு — 4 பல்,
மிளகாய் வற்றல் — 10,
பச்சை மிளகாய் — 2,
தனியா பவுடர் — 1 ஸ்பூன்,
இஞ்சி, சோம்பு, கிராம்பு, ஏலக்காய், கசகசா — சிறிதளவு,
எண்ணெய் அல்லது டால்டா — 1 டேபிள் ஸ்பூன்.

செய்முறை:

சோயாபீன்ஸை முதல் நாளே ஊறவைத்து விட்டு, மறுநாள் காலை நீரில்லாமல் வடித்து, பாதி தயிரில் ஊற வைக்கவும். உருளைக் கிழங்கையும் நறுக்கி வைத்து மீதி தயிரில் ஊற வைக்கவும். (½ மணி நேரம் ஊற வைக்கவும்).

கொப்பரை, பூண்டு, இஞ்சி, தனியா பவுடர், மிளகாய் வற்றல், வெங்காயத்தில் பாதி, பச்சை மிளகாய், சோம்பு, கசகசா இவைகளை நைசாக அரைத்துக் கொள்ளவும். மீதி வெங்காயத்தை வதக்கி வைக்கவும். அத்துடன் அரைத்த மசாலாவையும், சோயா பீன்ஸையும் சேர்த்து பத்து நிமிடங்கள் வதக்கவும். பிறகு தயிரை விட்டு வேக விடவும். உருளைக் கிழங்கையும் சேர்த்து வேக விட்டு உப்பு போட்டுக் கலக்கவும். ஏலம், கிராம்பைப் பொடி செய்து போடவும். கமகமவென வாசனை ஊரைத் தூக்க ''ஆலூகர்ட்'' தயாராகிவிடும்! (சாதத்தில் பிசைந்து சாப்பிடவும்; பூரி, சப்பாத்தி முதலியவைகளுக்குத் தொட்டுக் கொள்ளவும் ஏற்றது.)

— அனுஜய், கோவை.

## மூன்றாம் பரிசு
## வாழைக்காய் தயிர் வடை (காரம்)

தேவையான பொருட்கள்:

முற்றிய வாழைக்காய் — 3.
உளுத்தம் பருப்பு — ¼ லிட்டர்.
தயிர் — ½ லிட்டர்.
பச்சை மிளகாய் — 4.
வற்றல் மிளகாய் — 4.
இஞ்சி — சிறு துண்டு.
எண்ணெய் — ¼ லிட்டர்.
உப்பு — திட்டமாக.
கறிவேப்பிலை, கொத்துமல்லித் தழை — கொஞ்சம்.

செய்முறை:

வாழைக்காயைத் தோல் சீவி, துண்டங்களாக நறுக்கித் திட்டமாக உப்பு சேர்த்து வேக விடவும்.

உளுத்தம் பருப்பைத் தண்ணீரில் கொட்டி ஊற வைக்கவும். தயிரில் சிறிது உப்பு, இரண்டு பச்சை மிளகாய், இஞ்சி, கொஞ்சம் கொத்துமல்லித் தழை இவற்றை அரைத்துக் கலந்து வைத்துக் கொள்ளவும்.

வாழைக்காய் வெந்தவுடன் ஊற வைத்து இருக்கும் உளுத்தம் பருப்புடன் சேர்த்துப் பச்சை மிளகாய், வற்றல் மிளகாய் சேர்த்துச் சாதாரண வடைக்கு அரைப்பது போல் அரைத்து வைத்துக் கொள்ளவும். கறிவேப்பிலை, கொத்துமல்லித் தழை, உப்பை மாவில் போட்டுப் பிசையவும்.

அடுப்பில் இலுப்பச் சட்டியில் எண்ணெயை வைத்து அது காய்ந்தவுடன் வடைகளைத் தட்டிப் போட்டு எடுக்கவும். எண்ணெய் வடிந்தவுடன் சூடாகத் தயிரில் போடவும். பிறகு பரிமாறவும். (இதே போல் உருளைக் கிழங்கு, சேப்பங்கிழங்கு, விரும்பிய காய்களில் வடைகள் செய்யலாம்.)

மேற்கூறிய அளவிற்குச் சுமார் 15 வடைகள் வரும். மிருதுவாக, சாப்பிடச் சுவையாக இருக்கும்.

— ஆர்த்தி ராமஸ்வாமி, கடலூர்.

## ஆறுதல் பரிசு
## பயறு பப்ஸ்

தேவையான பொருட்கள்:

கெட்டியான தயிர் — ½ லிட்டர்.
தேங்காய்த் துருவல் — 1 கப்.
பிரெட் தூள் — 1 கப்.
சன்ன ரவைத் தூள் — ½ கப்.
முளை கட்டிய பயிறு — 1 கப்.
வெள்ளைக் கொண்டைக்கடலை — 1 கப்.
புழுங்கல் அரிசி — 1 கப்.
பச்சை மிளகாய், பட்டை மிளகாய் — 15.
வெங்காயம், இஞ்சி — சிறிதளவு.
கொத்துமல்லி, கறிவேப்பிலை.
தோசை மாவு — 2 கப்.
தேவையான அளவு உப்பு.
பொரிக்க அவரவருக்கு விருப்பமான எண்ணெய்.

செய்முறை:

முதலில் முளைகட்டிய பயிறு, கொண்டைக்கடலை, அரிசி இவற்றைக் களைந்து ஊற வைக்கவும். பிறகு இவற்றை உப்பு மிளகாய், பெருங்காயத்துடன் கொஞ்சம் கொரகொரப்பாக அரைக்கவும். எடுக்கும் முன்பாக உதிர்த்து வைத்துள்ள பிரெட் தூள் மற்றும் சன்ன ரவை கலந்து அரிந்து வைத்துள்ள வெங்காயம், பச்சைக் கொத்துமல்லி, கறி

பரங்கிக் காயைத் தோல் சீவிச் சிறு துண்டுகளாக நறுக்கவும். கடுகு, வெந்தயம், கறிவேப்பிலை, பெருங்காயம் தாளித்து, பரங்கித் துண்டுகளைச் சேர்த்து உப்பு, மஞ்சள் பொடி போட்டுச் சிறிது தண்ணீர் விட்டு வேக வைக்கவும். கொத்துமல்லித் தழை, புளி, வெல்லம், அரை ஸ்பூன் சரம் மசாலா, கசகசா, 4 பல் பூண்டு சேர்த்து சிறு துண்டு இஞ்சி, அரைத்து, பரங்கி வெந்ததும் சேர்த்துக் கொதிக்க விட்டு எல்லாமாக ஒன்று சேர்ந்து வரும் போது இறக்கவும். சப்பாத்தி, பூரிக்குத் தொட்டுக் கொள்ள இது நன்றாக இருக்கும்.

— விஷி.

குளிர், பனி காலங்களில் சிலருக்கு முகம், கை, கால் போன்ற தோல் பகுதியில் வறட்டுத் தன்மையும், வெண்மையாக சாம்பல் பூத்தது போல் காணப்படும். இதற்கு அதிகம் சோப்பைப் பயன்படுத்தாதீர்கள். குளித்தவுடன் ஒரு டீஸ்பூன் தே.எண்ணெய் நல்லெண்ணெயுடன் ஒரு சொட்டு எலுமிச்சம்பழச்சாறு சேர்த்து நன்கு குழைத்து, கை, முகம் கழுத்து போன்ற இடங்களில் தடவி விடுங்கள். நாள் முழுவதும் தோல் பளபளப்பாக இருப்பதோடு, வறட்டுத் தன்மையும் இருக்காது.

— பாலா.

வேப்பிலையையும் கலக்கவும். பிறகு இந்த கெட்டியான மாவைச் சிறுசிறு உருண்டைகளாகத் தோசை மாவில் தோய்த்து எண்ணெயில் போட்டுப் பொரிக்கவும். தேங்காய்த் துருவலைத் தயிரில் கலந்து வைக்கவும். பொரித்த உருண்டைகளைத் தயிரில் தோய்த்துப் பரிமாறினால் மிகவும் சுவையாக இருக்கும். தோசை மாவு இல்லாதிருந்தால் சிறிதளவு மைதாவைக் கரைத்துத் தோய்த்துப் போடலாம்.

— எஸ். ஜெயந்தி, ஸ்ரீரங்கம்.

## ஆறுதல் பரிசு

## தயிர் டிலைட்

உருளைக்கிழங்கு ரோஸ்ட் தவிர வேறு எதுவானாலும் என் குழந்தைகள் தொட்டுக் கூடப் பார்க்க மாட்டார்கள். அப்படியே சாப்பிட்டாலும், தப்பித் தவறிக் கூட, காலையில் செய்த கூட்டோ, கறியோ, பொரியலோ மீந்து போனால் தொடவே மாட்டார்கள். காய்கறி விற்கும் விலையில் தூக்கிக் கொட்டவா முடிகிறது? நான் ஒருத்தியே எவ்வளவு சாப்பிட முடியும்?' என்று அங்கலாய்க்கும் தாய்மார்களுக்குத் தயிர் ஒரு வரப்பிரசாதமாக அமைகிறது.)

தேவையான பொருட்கள்:

பீன்ஸ், அவரை, சௌசௌ அல்லது கீரை — இவற்றில் செய்த கூட்டு அல்லது பொரியல் — நான்கு பெரிய கரண்டி,

ஒரு பெரிய கப் — ஆடையுடன் கூடிய புளிக்காத தயிர்,

பெரிய வெங்காயம் — 1,

தாளிக்கச் சிறிது கடுகு, உளுத்தம் பருப்பு, சிறு துண்டு இஞ்சி, ஒரு பச்சை மிளகாய், கறிவேப்பிலை, கொத்துமல்லித் தழை,

காய்ந்த அல்லது புதிய ரொட்டித் துண்டுகள் — 4,

ரொட்டியை வறுக்க ஒரு மேஜைக் கரண்டி டால்டா.

செய்முறை:

வெங்காயத்தைச் சிறு துண்டுகளாக நறுக்கவும். வாணலியில் கடுகு, உளுத்தம் பருப்பைத் தாளித்து, வெங்காயத்தை இரண்டு நிமிஷம் புரட்டி, கீழே இறக்கவும். நன்றாக ஆறிய பின் இஞ்சி, பச்சை மிளகாய், கறிவேப்பிலை, கொத்துமல்லித் தழை, இவற்றைச் சேர்த்து ஆடைத் தயிருடன் நன்றாகக் கலக்கவும். இவற்றுடன் மீந்த கூட்டு அல்லது பொரியலைக் கலக்கவும்.

பிரெட்டைச் சிறு துண்டுகளாக்கி டால்டாவில் சிவக்க வறுத்துச் சேர்க்கவும். தயிர்க் கூட்டுக் கலவையில் சேர்க்கவும்.

— ஜானகி ஆராமுதன், சென்னை — 92.

## பரிசுப் பொருட்கள்:



# டாக்டர் பதில்கள்



**பிரபல பெண் மருத்துவர் கமலா செல்வராஜ் வாசகிகளின் கேள்விகளுக்கு விரிவாக பதில் அளிக்கிறார்.**

திருமதி ஜானகிராமன், கோவை.

'எனக்குத் திருமணம் ஆகி நான்கு வருடங்கள் ஆகின்றன. எங்களுக்கு ஒரு குழந்தையும் உள்ளது. ஆனால், என் கணவர் அடிக்கடி உணர்ச்சிவசப்படுபவராக இருக்கிறார். அவருக்கு வயது 28 தான் ஆகிறது. பார்ப்பதற்குக் கிழவர் போல் தோற்றமளிக்கிறார். கண்கள் குழி விழுந்து, ஒரே கருவளையங்களாகவும், முகம் ஒட்டியும் காட்சி அளிக்கிறார். இதை அவரே அடிக்கடிச் சொல்லிக் குறைபட்டுக் கொள்கிறார். இதனால், அவர் ஒரு மனநோயாளி போல், தாழ்வு மனப்பான்மை கொண்டு வீட்டிலே முடங்கிக் கிடக்கிறார். வேலைக்குச் சென்று விட்டு வீட்டிற்கு வந்தால் பின் வெளியே கூடச் செல்வதில்லை. இதை நினைத்துக் கொண்டே இருக்கிறார். இதைப் போக்குவதற்கு வழி என்ன? என் கணவரின் குறையைப் போக்க ஒரு வழி கூறுங்கள்.

நீங்கள் உங்கள் கணவரைப் பற்றிக் கொடுத்துள்ள வர்ணனைகளிலிருந்து அவரின் தாழ்வு மனப்பான்மைக்கு நீங்களும் ஒரு வகையில் காரணமோ என்று தோன்றுகிறது. ஒருவரது மனநிலை கூட அவரது புறத் தோற்றத்தைப் பாதிக்கும் என்பது மருத்துவ உலகமும் ஒப்புக் கொண்ட உண்மை. எனவே, உங்கள் கணவரை ஒரு மகிழ்ச்சியான சூழ்நிலையில் வைத்துக் கொள்ள வேண்டியது உங்கள் கடமை. வேலை முடிந்து களைத்துத் திரும்பும் உங்கள் கணவரைப் பளிச்சென்ற தோற்றத்துடன், முகத்தில் புன்சிரிப்புடன் வரவேற்றுப் பாருங்கள். அவர் சோர்வு பறந்து போவதுடன், உங்கள் புத்துணர்ச்சியும் அவரை ஒட்டிக் கொண்டு விடும். வயிறு நிறையப் பிடித்தமான உணவை அவருக்கு வேளை தவறாமல் கொடுங்கள். மனக்கவலையைப் போக்கி, இரவு அமைதியாக உறங்க வழி செய்யுங்கள். தினமும் காலையில் எழுந்தவுடன், "உங்கள் முகம் இப்பொழுது பொலிவு பெற்று வருகிறது. சுருக்கங்கள் எவ்வளவோ குறைந்து விட்டனவே? உடம்பு கூடச் சற்று சதைப் பிடித்தாற் போல் தோன்றுகிறதே?" என்று பாராட்டுங்கள் இது அவர் மனத்துக்கு டானிக் போல.

இனி உடலுக்கு. 28 வயது என்பது மிகவும் இளம் வயது. ஆயினும் ஒருவரின் உணவுப் பழக்கம், செய்யும் வேலை, சுற்றுப்புறச் சூழ்நிலை இவற்றைப் பொருத்தும் அவரின் தோலில் பாதிப்பு ஏற்படும். இரவுத் தூக்கம் பாதிக்கப்பட்டால் கண்களைச் சுற்றிக் கருவளையம் ஏற்படும். தோல் சுருக்கம் நீங்க **OIL OF OLAY** என்னும் குழம்பை முகத்தின் மீது காலையும் மாலையும் தேய்த்து விடுங்கள். கண்களைச் சுற்றி **HERBY UNDER EYE CREAM** வாங்கித் தடவலாம். டாக்டரை அணுகி நல்ல டானிக் வாங்கிக் கொடுங்கள். வயிற்றில் பூச்சி இருந்தால் பூச்சி மாத்திரை **MEBENDAZOLE** ஆறு வாங்கி காலை ஒன்று, மாலை ஒன்று என மூன்று நாட்கள் சாப்பிடச் சொல்லவும்.

ஜி. சுஜாதா, வேலூர் — 1.

பெரும்பாலானோர் அழகுக்காக 'லிப்ஸ்டிக்' போட்டுக் கொள்கின்றார்களே, இது

**சரியா? சாயம் வாய்க்குள் சென்று விட்டால் அதனால் உடலுக்கோ அல்லது உதட்டுக்கோ எந்தப் பாதிப்பையும் ஏற்படுத்தாதா?**

அக்காலத்திலும், இக்காலத்திலும் பலர் உதடு சிவப்பாக இருப்பதற்காக வெற்றிலை போடுவதுண்டு. ஆனால் தற்பொழுது லிப்ஸ்டிக் பரவலாகப் பயன்படுத்தப்படுகிறது. தரமான லிப்ஸ்டிக்கினால் பாதிப்பு இல்லை என்றாலும், லிப்ஸ்டிக்கில் உள்ள சில ஒவ்வாத பொருட்களால் ஒரு சிலருக்கு தோலில் ஒவ்வாமை ஏற்படலாம். உதாரணமாக DIBRAM, TETRABRAM போன்ற சாயப் பொருட்கள் கலந்த லிப்ஸ்டிக்கினால் உதடுகள் சிவந்து வெந்து போய், வயிற்றுக் கோளாறும் ஏற்படலாம். LIP GLOSS என்ற திரவத்தில் வாசனைப் பொருட்களையும், தித்திப்பையும் கலப்பதால் உதடு வீக்கம், அதிகமான ஜுரம், ஆஸ்துமா, தோல் சொறி போன்றவை சிலருக்கு ஏற்படலாம். எனவே எந்தப் பொருளையும் பயன்படுத்தும் முன் உடலில் ஓர் இடத்தில் சிறிது தடவி ஒவ்வாமை ஏற்படுகிறதா என்று கவனித்த பிறகு பயன்படுத்த வேண்டும்.

சசிகலா, குரோம்பேட்டை.

**என் மகனுக்கு 21 வயது ஆகியது. அவனுக்கு இரவில் அடிக்கடி விந்து வெளியாகிறது. இது ஒரு மாதத்திற்கு 5 முதல் 6 முறை வெளியாகிறது. இதனால் அவன் மிகவும் சோர்ந்து காணப்படுகிறான். அவனால் படிப்பில் சரியாகக் கவனம் செலுத்த முடியவில்லை. இதனால் அவன் பாதி நாட்கள் இரவில் தூங்குவதேயில்லை. இதை நிறுத்தத் தாங்கள்தான் தயவு செய்து நல்லதொரு மருந்தைக் கூற வேண்டும்.**

உங்கள் மகனின் வயதுள்ள ஆண்களுக்கு இரவில் விந்து வெளிப்படுவது இயற்கை. சாதாரணமாக மாதம் ஒன்று அல்லது இரண்டு முறை வெளிப்பட்டால் உடல் பலவீனமடையாது. மனத்தளர்ச்சியும், மனக்கவலையும் உள்ளவர்களுக்குத்தான் மாதத்தில் 5, 6 முறை விந்து வெளிப்படும். எனவே உங்கள் மகனை மனக்குழப்பம், மனக்கவலை கொள்ளாமல் இருக்கச் சொல்லுங்கள். உடல் தளர்ச்சியை நீக்க B — COMPLEX மற்றும் PROTEIN போன்ற டானிக்குகள் வாங்கிக் கொடுங்கள். மிகவும் கவலையாக இருந்தால் திருமணம் செய்து வைக்கவும்.

கு. சாந்தா, கோவை — 43.

**எனக்குக் குழந்தை பிறந்து இரண்டு மாதங்கள் ஆகின்றன. ஆயுதம் போட்டுத்தான் குழந்தையை எடுத்தார்கள். அதனால் குழந்தையின் தலை வட்டமாக இல்லாமல் பின்னால் நீளமாகத் தூக்கிக் கொண்டு இருக்கிறது. இதைச் சரி செய்ய முடியுமா? தலையை வட்டமாகச் செய்வதற்குச் சாதனங்கள் ஏதாவது இருக்கிறதா?**

சாதாரணமாக ஒரு குழந்தை பிரசவத்தின் போது கடினமான பிரசவப் பாதையைக் கடக்கும் போது மென்மையான குழந்தையின் தலை அழுத்தப்பட்டுக் கொண்டை வைத்தாற்போல் வீக்கத்துடன்தான் பிறக்கும். ஆனால் இது 24 மணி நேரத்திற்குள் அழுந்தி உருண்டை வடிவத்தைப் பெற்று விடும். ஆனால் ஆயுதம் போட்டு எடுக்கும் போது சிறிய சிராய்ப்பிலிருந்து இரத்தக் கட்டி, எலும்பு முறிவு வரை ஆபத்து நேரலாம். இதற்கு உடனடி மருத்துவச் சிகிச்சை தேவை. உங்கள் குழந்தை பிறந்து இரண்டு மாதமாகியும் தலை நீண்ட வடிவில் இருப்பது ஆயுதத்தினால் அல்ல. பிறவியிலேயே அதன் தலை அமைப்பு அதுதான். உண்மையில் தலை முடியை நீக்கிவிட்டுப் பார்த்தால் நம் அனைவரின் தலைகளுமே ஒவ்வொருவித அமைப்புடன் இருக்கும். குழந்தையைக் குளிப்பாட்டும் பொழுது தலையைச் சிறிது அழுத்திக் குளிப்பாட்டுவதும், நடுவில் குழிந்த தலையணையைப் பயன்படுத்துவதும் ஓரளவு பலன் தரலாம்.

...... குன்னூர்.

**என் வயிற்றில் மேல்வயிறும், அடி வயிறும் பெரிதாகத் தொப்பை விழுந்தது போல் உள்ளது. அதற்கான உடற்பயிற்சிகள் செய்து வந்தால் நெஞ்சு படபடப்பும், தலைசுற்றலும் வந்து உடற்பயிற்சி செய்ய விடாமல் தடுக்கிறது. என் வயது 28. எனக்கு இரண்டு குழந்தைகள். இரண்டாவது குழந்தை இப்போது எல். கே. ஜி. படிக்கிறது. இன்னும் என் வயிறு குறைந்தபாடில்லை.**

**எனவே இதற்கு ஏதேனும் சாப்பிடலாமா?**

நம் தமிழ்நாட்டுப் பெண்கள் பொதுவாகவே ஒரு குழந்தை பிறந்ததும் தங்கள் உடல் அழகைப் பேணுவதில் ஆர்வம் காட்டுவதில்லை. குழந்தை பிறந்த மூன்று மாதம் வரை நல்ல ஓய்வும், அதிக நெய்யும் சேர்ந்து உடலைப் பருக்க வைக்கிறது. பிறகு திடீரென்று உடல் இளைக்க உடற்பயிற்சிகளைத் தீவிரமாகச் செய்யும் போது படபடப்பு வருவது இயல்பு. படபடப்பைத் தடுக்க உடற்பயிற்சியைப் படிப்படியாக அதிகரிக்க வேண்டும். குழந்தை பிறந்தவுடன் வயிற்றைக் கட்ட வேண்டும். வயிற்றைக் கட்டாவிட்டால் வயிறு குறைவது கடினம். உங்கள் எடையைக் குறைக்க உண்ணும் உணவைப் பாதியளவாக்குவதுடன் எண்ணெய்ப் பண்டங்கள், இனிப்பு, கிழங்கு வகைகள், ஊறுகாய் போன்றவற்றையும் உணவிலிருந்து நீக்கிவிட வேண்டும். பொதுவாக மலைப்பிரதேசத்தில் இருப்பவர்களுக்குத் தோல் எண்ணெய்ப் பசையின்றி உலர்ந்தும், கறுத்தும் காணப்படும். இதற்குக் காலையும், மாலையும் நல்ல தரமான COLD CREAM போன்றவற்றைப் பயன்படுத்தலாம்.

தொகுப்பு: சுபா பாரதி.

# பெண்களுக்கு ஏற்ற வேலை எது?

## மதுரையிலே ஒரு 'திடீர்'ப் பேட்டி!

'நீங்க என்ன மதுரையா?' என்று கேட்கும் அளவிற்குப் பெண்மை உயர்வு பெற்ற மதுரையிலே சில பேரை அணுகி, 'பெண்களுக்கு ஏற்ற வேலை எது?' எனக் கேட்டபோது —



**சக்திவேல்:**

நான் ஒரு டாக்டர்ங்கற முறையிலே சொல்றேன். பெண்கள் வேலைக்குச் செல்வதாலே அவங்க உடல்நிலை, மனநிலை பாதிக்கப்படுது. அதனால சொல்றேன் பெண்களுக்கு ஏற்ற வேலை வீட்டு வேலை மட்டும்தான். நிம்மதியா வீட்டிலே இருந்துகிட்டு கணவனுக்கு ஏற்ற நல்ல மனைவியா குழந்தைகளை கவனிச்சுகிட்டு சந்தோஷமா இருக்கலாம்.



**பாலா:**

வீட்டிலே இருந்து வேலைகளைப் பார்க்கற பெண்களுக்குத்தான் அதோட கஷ்ட நஷ்டங்கள் புரியும். வேலை பார்க்காத பெண்களுக்கு இப்ப சமுதாயத்தில் மதிப்பு இல்லை. கணவனே வேலை பார்க்காத மனைவியை 'வேலைக்காரி' போல்தான் பல வீடுகளில் நடத்தறாங்க. அதனால தையல் போன்ற கைத்தொழில்கள் மூலமாகவோ, படித்த பெண்களாக இருந்தால் டியூஷன் சொல்லித் தருவது மூலமாகவோ சம்பாதிப்பது நல்லது.

**கிரிஜா:**

நான் ஒரு மாணவியா என் கருத்தைச் சொல்ல விரும்பறேன். இப்ப சமுதாயத்தில் பெண்களுக்கு 'சுதந்திரம்' கிடைத்து விட்டதா? சொல்வது முழுப் பொய். பெண்களை வாட்டி வதைக்கற கொடுமைகள் பல இடங்களில் நடந்திட்டுதான் இருக்கு. அதனால பெண்களுக்கு நீதி வழங்க, பெண்களுக்கு நியாயம் கேட்டுப் போராடும் வேலைதான் முதலில் முக்கியமான வேலை. அந்த வகையில் பார்க்கும் போது 'வழக்கறிஞர்' வேலைதான் பெண்ணுக்கு ஏற்ற வேலை. பல பெண் வழக்கறிஞர்கள் உருவாகி வாதம் செய்து சட்டங்களைப் பெண் பாதுகாப்பிற்கு ஏற்றபடி மாற்றி அமைத்து புரட்சி செய்ய வேண்டும். பெண் நீதிபதிகள் தோன்றி ஆண்களின் அக்கிரமங்களை ஒடுக்க வேண்டும்.



**போஸ்:**

ஆபீஸ் வேலை, விட்டு வேலை இரண்டுமே பெண்களை 'கிணற்றுத் தவளை' ஆக்கிடும். உலக அனுபவமே இல்லாமல் செய்து விடும். நாலு பேரை சந்தித்து அவங்களுக்கு ஏற்ற மாதிரி சாமர்த்தியமா பேசி செயல்படும் வேலைகளாலே பெண்களுக்குத் தனிச் துணிச்சல் வந்திடும். வாழ்க்கை பயம், பீதி இருக்காது. பாரதி கண்ட புதுமைப் பெண் இந்தப் பெண்ணாகத்தான் இருக்க முடியும். அதனால் 'சுயதொழில்' ஆரம்பிக்கும் பெண்களின் மதிப்பு; நிலை நிச்சயமாய் உயர்ந்து விடும்.





**வடிவுடை நாயகி:**

இப்ப பத்திரிகை துறையில் பெண்களின் ஈடுபாடு ரொம்ப குறைவா இருக்கு. பத்திரிகைகளில் பேட்டி — போட்டோ வருவதற்குக் கூட தேவை இல்லாமல் அனாவசியமா பயப்படற பெண்கள் இருக்காங்க. அவங்களை பெண் பத்திரிகையாளரால்தான் திருத்த முடியும். ஆண் எழுத்தாளர்களை விட பெண் எழுத்தாளர்கள் மிகக் குறைவு. எழுத்தாளர் — பத்திரிக்கை வேலை ரொம்ப கஷ்டமானதுதான். இருந்தாலும் பெண்கள் வீட்டில் இருந்தபடியே கதைகள், சமையல் குறிப்புகள் எழுதி சம்பாதிக்கும் வேலையையாவது மேற்கொள்ளலாம்.

**மீனா:**

நான் குடும்பத் தலைவியா இருந்தாலும் வீட்டில் இருக்கும் பெண்களுக்கு, ஆபீஸ் போகும் பெண்களை விட 'ஓய்வு' அதிகம் கிடைக்கிறது என்றுதான் சொல்வேன். ஆபீஸ் 'டென்ஷன்' வீட்டில் இருக்காது. மாமியார், நாத்தனார் தொல்லைகள், கொடுமைகள் இல்லாமல் இருந்தால் வீட்டில் இருந்தபடியே கோழிப் பண்ணை அமைத்து வருமானம் தேடுவது... மாடுகள் வளர்த்து பால் வியாபாரம் செய்வது தோட்டங்கள் அமைத்துப் பராமரிப்பது போன்ற பல உபயோகமான வேலைகளை செய்யலாம்.





**பிரபு:**

சமுதாயத்திற்குத் தொண்டு செய்யும் டாக்டர், நர்ஸ், ஆயா வேலை, பெண் போலீஸ் வேலை, எல்லாமே பெண்களுக்கு ஏற்ற வேலைதான்.

# 1kg=10½Lts

ஒரு கிலோகிராம் ஸாகர் ஸ்கிம்டு மில்க் பவுடர் மூலம்
பத்தரை லிட்டர் ஸ்கிம்டு மில்க் கிடைக்கும்.
அருமையான சுவை...அப்படியே அருந்தலாம்.
அல்லது, குலாப் ஜாமுன், ஐஸ்க்ரீம், தயிர், கீர், ரஸகுல்லா,
கஸ்டர்டு, மில்க்ஷேக் இவை தயாரிக்கப் பயன்படுத்தலாம்.
தேனீர், காப்பிக்கும் கூடத்தான்!
ஸாகர், ஒரு பாற்கடல்.




ஸாகர்
ஸ்கிம்டு மில்க்
பவுடர்
500 கிராம்
பேக்குகளில்
கிடைக்கும்.



விற்பனைவிடுப்போர்: குஜராத் கோ ஆப்பரேடிவ் மார்க்கெட்டிங் ஃபெடரேஷன் லிமிடெட், ஆனந்த், குஜராத்.





**மீனாட்சி:**

வேலை பார்க்கும் பெண்களுக்கு இருக்கும் தன்னம்பிக்கை.. எந்தப் பிரச்னையையும் சமாளிக்கும் திறமை நிச்சயம் வீட்டில் இருக்கும் பெண்களுக்குக் கிடையாது. எல்லா செலவுகளுக்கும் கணவனிடம் கை நீட்டி காத்திருக்கும் கொத்தடிமை நிலைமைதான் இருக்கு. வீட்டில் இருந்தபடியே கதை, கட்டுரைகள் அல்லது குறிப்புக்கள் எழுதியாவது சம்பாதிக்கலாம்.

**பாலு:**

இப்ப பெண்களுக்கு ஏற்ற வேலை சுயவேலைதான். இந்தக் காலத்து பெண்கள் அளவுக்கு அதிகமா பேசறாங்க. தங்களை விட ஆண்கள் திறமையில் குறைந்தவர்களா நினைக்கறாங்க. அதனால ஆபீஸ் வேலைகளில் பெண்களால் பிரச்சனைகள் வந்திட்டு இருக்கு. அதனால காய்கறி கடை வச்சு வியாபாரம் செய்யற மாதிரி வேலைதான் பெண்ணுக்கு லாயக்கு.





**மாலதி:**

நான் ஒரு மருந்துக் கம்பெனி அதிபராக இருந்து வருகிறேன். என் கைக் குழந்தையோடு அலையோ அலைன்னு அலைஞ்சு மருந்துகளை 'டெலிவரி' செய்ய வேண்டியிருக்கு. அதனால் ஓரளவு 'ரிஸ்க்' இல்லாத வேலை பெண்ணுக்கு நல்லது.

**ஞானசுந்தரம்:**

ஆபீஸில் பணிபுரியும் பல பெண்களுக்கு உலகமே தெரிவதில்லை. புடைவையா வாங்கறாங்க. சுயமா வேலை பார்க்கும் போதுதான் பொறுப்பு வரும். அப்போதுதான் பணக் கஷ்டமும் தெரியும்.





**நிர்மலா:**

நான் பள்ளிக்கூட டீச்சரா இருக்கேன். பிரச்சனை இல்லாத வேலை. பெண்களுக்கு ஏற்ற வேலை — டீச்சர் வேலைதான்.

**ரெங்கனாத ஜோஸ்யர்:**

பெண்கள் மனதிடத்தோட முன் னேறி வரும் இந்தக் காலத்தில் எல்லா வேலைகளும், எப்படிப்பட்ட வேலை களும் பெண்களுக்கு ஏற்ற வேலைதான். பெண்கள் பங்கு எடுக்காத துறைகளே இப்போது கிடையாது. கம்யூட்டர் துறையிலும் பெண்களின் அபாரமான சாதனைகள் பெருகிட்டு வருது. நாட்டை ஆளும் பிரதமர் வேலையை கூட புகழ் பெறும் அளவு பெண்கள் செய்து விட்ட பிறகு இந்த வேலையை பெண்ணால் செய்ய முடியாது இந்த வேலை பெண் ணுக்கு ஏற்ற வேலை இல்லை என்று ஒரு வேலையும் கூட கிடையாது.





**ராஜேஸ்வரி:**

ஏதோ ஆபீஸிற்குப் போனோம். வேலை பார்த்தோம். வந்தோம்னு இருந் தாலே போதும். சாதனை செய்யறேன்னு பெண்களுக்குப் பொருத்தமில்லாத வேலைகளில் இறங்கி ஆபத்தில் சிக்கி விடக் கூடாது.

பேட்டி: **விஜயா கண்ணன்**

புகைப்படங்கள்: **பாரதி**

## டால் ரிசோட்ஸ்

**தேவையான பொருட்கள்:**

வெந்த பருப்பு (து. பருப்பு, அல்லது பாசிப் பருப்பு) — 2 கப்,
பெரிய வெங்காயம் — 2,
மிளகாய் — 2,
இஞ்சி — சிறு துண்டு,
ஜவ்வரிசி — 1 கப்,
மிளகாய்த் தூள் — தேவையானால் 1 ஸ்பூன்,
ரொட்டித் தூள் — 2 கப்,
உப்பு — தேவையான அளவு,
ஒ. கே. ஆயில் அல்லது க. எண்ணெய் — ¼ லிட்டர்.




**செய்முறை:**

பருப்பை நன்கு மசித்துக் கொள்ள வும். வெங்காயம், இஞ்சி, மிளகாய் முத லியவற்றைப் பொடியாக நறுக்கிக் கொள்ளவும். அடுப்பில் வாணலியை வைத்து அதில் 2 ஸ்பூன் எண்ணெய் விட்டு வெங்காயம், ப. மிளகாய், இஞ்சி, மிளகாய்த்தூள் போட்டு நன்கு வதக்கி பருப்பில் கொட்டி, நன்கு பிசைந்து கொள்ளவும். இத்துடன் உப்பு ஜவ்வரிசி யையும் சேர்த்து நன்கு கிளறவும்.

பின் கலவையைச் சிறு சிறு உருண் டைகளாகப் போட்டு ஒவ்வொரு உருண் டையையும் ரொட்டித் தூளில் போட்டு புரட்டி எடுத்துக் கொள்ளவும்.

வாணலியில் எண்ணெய் விட்டு எண் ணெய் காய்ந்தவுடன் இந்த உருண்டை யைப் பொரித்து எடுக்கவும். பொன் நிறமானதும் எடுத்து விடவும்.

தேங்காய் சட்னியோடு சேர்த்துச் சூடச் சூடச் சாப்பிட்டால் சுவையாக இருக்கும்.

பி. கு.: பருப்பிற்குப் பதில் சாதத்தை யும் போட்டுச் செய்யலாம்.

— ரஜிதா.

# ஜீவநதிகள்

21

"தாம்பத்தியங்கற தத்துவத்தைப் புரிஞ்சுக்கக் கூடத் தெரியாம, விளையாட்டாவே உன்னைப் பெத்தேண்டி. உன்னைப் பொம்மையா நினைச்சுத்தான் நான் சந்தோஷப்பட்டேனே தவிர எங்கொழந்தைன்னு பாசத்தோடயும், பக்குவத்தோடயும் நடக்க வெகு நாட்களாச்சு. அதுக்குள்ளே எல்லாமே நடந்து கை மீறிப் போயிடுத்து பாரதி."

கண்கள் இப்போது வெள்ளமாய் பொழிய ஆரம்பித்து காமாட்சிக்கு. முகம் சிவந்து தணலாய் கனன்றது.

"பாரதி, என்னைப் போல வீணான வாளே வச்சுக்க, கூடப் பொறந்தவாளும், சொந்தக்காராளும் நான், நீன்னு போட்டி போட்டுண்டு வருவா. ஏன் தெரியுமா? காலையிலேருந்து, அரைச்சு, கரைச்சு, அடுப்பு மொழுகி, வெந்து, குழைஞ்சு மடியோட மாடா உழைக்கறதுக்கு காசில்லாத வேலைக்காரியா எங்களைப் பயன்படுத்திக்கத்தான். ஆனா அப்படி அவா உக்காரவிடாம எங்களை வேலை வாங்கினதும் பல விஷயத்துக்கு நல்லதுதான்னு இப்ப நினைச்சுக்கறேன். விடிஞ்சும், விடியாததுமா எழுந்து வேலைய ஆரம்பிச்சா, தூங்கறதுக்கு பத்து, பதினோரு மணி ஆயிடும். பாய்லே படுத்தா, இத்தனை நேரம் களைச்சு கெஞ்சின உடம்பு, அப்படியே மரத்து ஜடமாய் கட்டையாயிடும். அப்பிரமமாய் தூங்குவேன். சின்ன வயசுலேருந்து உழைச்சு, உழைச்சு கையெல்லாம் எப்படி காப்பு காச்சு கறுத்து போச்சு பாரு."

கறுத்து, கிண்டு, கிண்டாய் இருந்த தன் உள்ளங் கைகளை மலர்த்திக் காட்டினாள் காமாட்சி.

பாரதியின் கண்கள் திரண்டன. வெடித்து வந்த விம்மலை சிரமப்பட்டு வெளிவராமல் தடுக்க சிரமப்பட்டாள்.

"வாழ்க்கையில நான் இழந்த சௌபாக்கியம் எவ்வளவுன்னு தெரிஞ்சுக்கறதுக்கு ரொம்ப நாளாயிடுத்துடி. அப்போ மனசும், உடலும் 'ஹா ஹா'ன்னு பறந்தது. ஐயோ...ன்னு கிடந்து தவிச்சது. பொங்கிப் பொங்கி மாஞ்சு போனது. இன்னும் தீவிரமா வீட்டு வேலையை இழுத்துப் போட்டுண்டு உழைச்சு, என் உடம்பைத் தீய்க்கிற அக்னியைத் தணிக்கப் பார்த்தேன். சில சமயம் முரண்டு பிடிச்சுண்டு எனக்கு அடங்காம மனசும், உடலும் ஆலாய்ப் பறக்கும். புரண்டு, புரண்டு, அழுது, பெருமூச்சு விட்டு பைத்தியம் பிடிக்காத குறையாய் கண்ணீர் விடும் என்னை, என் மாமியார் எத்தனை விதமா பாடியும், கதைகள் சொல்லியும், ஸ்லோகங்கள் சொல்லியும், பாதி ராத்திரின்னு கூட பாக்காம தோட்டத்துக்கும், மொட்டை மாடிக்குமா அழைச்சுண்டு போய் என்னோடயே அலைஞ்சுண்டு, எத்தனைவிதமா சமாதானப்படுத்தியிருக்கார் தெரியுமா. அப்படியும் மனசு சரியாய் தேறி எழுந்திருக்க ரெண்டு, மூணு நாளாயிடும்."

பேச்சுத் தடைப்பட விம்மினாள் காமாட்சி.

"அம்மா! பழசையெல்லாம் நினைச்சு ஏம்மா கஷ்டப்படுத்திக்கறே? வாண்டாம்மா. தாங்கலைம்மா."

பாரதி, காமாட்சியை ஆதரவுடன் நோக்கியபடியே சிவந்த முகத்துடன் கூறினாள். உண்மை அவளைத் தகித்தது.

லதா, முகம் கவிழ்ந்து இப்போது விம்மிக் கொண்டிருந்தாள்.

"இல்லே பாரதி. சொச்சத்தையும் சொல்லிடறேன். இல்லேன்னா மனசு ஆறாதும்மா.

அப்போ நாங்க வெளில, வாசல்ல அதிகம் போனதில்லே. அப்பளம், வடாம் இட்டுண்டு வீட்டோடயே அடங்கியிருந்ததிலே நாங்களும் அடங்கியிருக்க முடிஞ்சது. எங்களை அடக்கிக்கவும் முடிஞ்சது.

ஆனா காலம் உருள்ற வேகத்துல எத்தனையோ மாறுதல்கள் ஏற்பட்டு போச்சு.



நமக்கு சௌகர்யமாயிருக்கறதை மாறுதலா ஏத்துக்கத் தெரிஞ்ச நமக்கு, சிலதில மட்டும் பழைமையை விடாம பிடிச்சுண்டு நிறையவே கஷ்டப்படறோம். மத்தவாளையும் கஷ்டப்பட வைக்கிறோம். இது எந்த விதத்துலே நியாயம் பாரதி?

படிப்பே இல்லாத உனக்கு, உன்னை ஸ்கூல்ல சேர்த்ததும், உன்னோட அரிச்சுவடியை வச்சுண்டுதான் நானும் படிக்கக் கத்துண்டேன். இப்போ அம்மாவோட, கொழுந்தையும் டான்ஸ் ஆடறதுன்னு பத்திரிகைகள்ள வர்றது. ஆனாக்க அந்த காலத்திலேயே எங்கொழுந்தையோட படிச்ச என்னைப் போல அம்மாக்கள் எத்தனை பேரோ? யாருக்குத் தெரியும் பாரதி?

ஆனா இப்போ அப்படியா? பொம்மனாட்டின்னா ஆம்பிளைகளுக்குச் சரியா படிப்பும் வேண்டியிருக்கே.

ஸிஸ்டர் சுப்புலக்ஷிமியும், அப்புறமும் மாளும் இவாள்ளாம் என்னைப் போலவும், மற்ற காரணங்களால் ஒதுக்கப்பட்ட அபலைகளுக்காகவும் எத்தனையோ பாடு பட்டா. சேவா சதனம் அமைச்சு அவாளுக்குப் புனர்வாழ்வு கொடுத்தா. அந்தக் காலத்துக்கு தகுந்த மாதிரி, அவாவாளுக்கு ஏற்ற வாழ்க்கையை அமைச்சுக் கொடுத்தா. அதுவே அப்ப ஒரு பெரிய்ய புரட்சிதான். அதுக்காக அவாளப் போல கஷ்டப்பட்டவா யாரும் இருக்க மாட்டா.

இந்தக் காலத்துக்குத் தகுந்த மாதிரி, பொண்களோட வாழ்க்கையில, அதுவும் லதா மாதிரி ஆயிடற பொண்களோட வாழ்க்கையில மாறுதல் ஏற்படுத்த, நம்மைப் போல பெரியவாளும், பொண், பிள்ளை பெத்தவாளும், ஆம்பிளைகளும் பரந்த நோக்கோடு முன்னால வரணும் பாரதி.

எங்க காலத்துல எங்களை வச்சுண்டு வேலை வாங்கிக்கவாவது போட்டி போட்டுண்டு கூப்பிட்ட உறவுக்காரா மாதிரி இப்போ யாரும் இல்லே. அவாளச் சொல்லியும் குத்தமில்லே. காலம் போற போக்கு அப்படி. அதனால அவா வீட்டை விட்டு வெளியே போய் தனக்குத் தேவையான சம்பாதனைக்காகவோ, படிச்ச படிப்புக்காகவோ வேலை செய்ய வேண்டியிருக்கு. சந்தர்ப்பமும், சூழ்நிலையும்தான் பஞ்சும், நெருப்புமாய் அவாளைத் தடுமாற வைக்கிறது.

சரீரத்துல ஏற்படற எத்தனையோ விபத்துக்களுக்கு, மாற்று அவயவங்கள் இதயத்துலேருந்து அத்தனையையும் பொருத்தி, அவாள மறுபடியும் முழு மனுஷாளா



ஆக்கிடறா. எந்த அவயவத்துக்கும் இது சாத்தியப்படறது. ஆனா உணர்வுங்கறதும் எல்லாருக்கும் ஒரே மாதிரிதான். அது ஆணானாலும், பொண்ணானாலும் உணர்ச்சிகள் ஒரே மாதிரிதான். அதை ஒரு சரீரத்துலேருந்து, இன்னொண்ணுக்கு மாத்த முடியுமா பாரதி? முடியாதும்மா. அதனாலதான் நமக்கு ஒருத்தரோட உணர்ச்சிகளைப் புரிஞ்சுக்கற மனசைத் தந்திருக்கிறார். அதை நாம நல்ல விதத்துல யோசித்து பிரயோஜனப்பட வைக்க வேண்டாமா பாரதி?

நீ சம்மதிக்கணும்கறதுக்குத்தான், இத்தனை வருஷமா என் மனசு ஆழத்துல பொதைஞ்சிருந்த அத்தனையையும் தோண்டி எடுத்து வெளியே போட்டுட்டேன். இனிமே இதுக்கு மேலே பேச எனக்குத் தெம்பில்லேம்மா.''

ஆயாசத்துடன் கால்களை நீட்டி, கண்களை மூடி சுவரில் சாய்ந்திருந்தவளின் கால்களில் சூடான நீர் விழவும், கண்களைத் திறந்தாள்.

நிதரிசனம் கண் முன் தெரிய, காமாட்சியின் பேச்சினால் பாதிக்கப்பட்டிருந்த பாரதிதான், தாயின் பாதங்களைப் பற்றிக் கொண்டு சத்தமின்றி அழுது கொண்டிருந்தாள்.

**ல**தாவிற்கும், ரமணிக்கும் கோவிலில் அதிக ஆர்ப்பாட்டமின்றி திருமணம் நடந்தது. ரமணியின் வீட்டிற்குப் போகு முன் காமாட்சியைக் கட்டிப் பிடித்துக் கொண்டு லதா அழுத அழுகை......

அவ்வப்போது ரமணியுடன் வந்து காமாட்சியைப் பார்த்து விட்டுப் போவாள் லதா.

அவளுடைய சிரித்த முகம், நிறைந்த வாழ்க்கை வாழ்வதற்கான அடையாளமாகத் தெரிய ஆரம்பித்த பின்பே நிம்மதியானாள் காமாட்சி.

**அ**ன்று விடிகாலையிலிருந்தே பிரபுவின் ஞாபகம் வந்து அவளை அலைக்கழித்தது. இரவு படுத்த காமாட்சிக்குத் தூக்கம் வரவில்லை.

'பிரபு கண்ணா! உன் சொத்தை சேதப்படாம, மத்தவா குத்தம் சொல்ல முடியாதபடி, பொருத்தமான கையிலே ஒப்படைச்சுட்டேம்பா. இனிமே உன் சொத்துக்குப் பழுதில்லேன்னு தெரிஞ்சு போச்சு. கண்ணா, உன்னைப் பாக்கணும்னு ஆசையாயிருக்குடா. நீ விட்டுப் போன பொருளை நல்ல இடத்துல சேர்க்கிற பொறுப்பு இருந்ததுனால உன்கிட்டே வரத் தயங்கினேன். இனிமே எனக்கு வரத் தடையில்லே. வரட்டுமாடா கண்ணா. பிரபு, பிரபு கண்ணா, என்னை அழைச்சுக்கோப்பா. இனிமே ஒரு நிமிஷம் கூட என்னாலே இங்கே இருக்க முடியாதுடா. இருப்புக் கொள்ளலையே கண்ணா. பிரபு..... பிரபு..... பிரபு கண்ணா......'

அவளெதிரில் பிரபு நின்று இரு கைகளையும் நீட்டி, 'வா பாட்டி! சீக்கிரமா வாயேன். என்னைப் பிடி பாக்கலாம். ம். இன்னும் சீக்கிரம். வா. ஓடி வா. பாட்டி... ஓடி வா... வா பாட்டி, வா..... ம்.... வா..........'

கலகலவென்று சிரித்துக் கொண்டே, அவனைக் கூப்பிட்டபடியே ஓட, பின்னாலேயே ஓடி களைத்து விழுந்தாள் காமாட்சி.

''பிரபு கண்ணா........

கூச்சலைக் கேட்டு ஓடி வந்த வனஜாவும், பாரதியும், காமாட்சி, எங்கேயோ புறப்பட்டு, தடுக்கி விழுந்தவள் போல் விழுந்திருப்பதைப் பார்த்து, பரபரப்புடன் தூக்கினார்கள்.

தலை ஒருபுறமாய் சாய, முகம் மட்டும் புன்னகையில் மின்னி, 'என்னுடைய காரியம் முடிந்தது. இனிமேல் எனக்கு ஓய்வு தான்' என்று சொல்வது போல் இருந்தது.

''அம்மா........''

''பாட்டீ.....''

பூக்கள் என்றாலே ஆசைப்படும் காமாட்சிக்கு, அதை சூட்டிக் கொள்ளும் பாக்கியம் இல்லாமலே காலம் கழித்த காமாட்சிக்கு, இப்போது 'பெரிய்ய தண்டு பூமாலை சாத்தப்பட்டு, படத்தில் சிரித்தபடியே நின்றிருந்தாள்.

ஊதுபத்தியும், விளக்கையும் ஏற்றி வைத்த வனஜா, படத்தை உற்றுப் பார்த்தாள்.

'பாட்டி, என்னை ஏமாத்திட்டியே. என் கல்யாணம் வரைக்குமாவது இருந்திருக்கக் கூடாதா? அத்தனை அவசரம் என்ன பாட்டி. நீ இந்த படத்துலே இருந்துண்டே, உருவமா எங்களுக்கு நல்ல வழியைக் காட்டணும். எங்களைத் தடுமாறாம நடக்க வைக்கணும். பாட்டி, அதையாவது செய் பாட்டி. கண்டிப்பா நீ செய்வேன்னு எனக்குத் தெரியும். நாங்கள்லாம் உன் செல்லப் பேத்திகளில்லையா. பாட்டி, அம்மா இப்போ எவ்வளவு மாறியிருக்கா தெரியுமா பாட்டி. உம்... நீதானே மாத்தியிருக்கே. என்னிக்கும் இந்த வீட்டுக் காவல் தெய்வமா, ஒளி விளக்கா இருந்து, காப்பாத்தணும் பாட்டி. பாட்டீ.....

தாள முடியாமல் விம்மினாள் வனஜா. பிறகு தன்னிடமிருந்த புது நோட்டை எடுத்து, அதில் ஸ்ரீராம ஜெயம் எழுதுவது போல் எழுத ஆரம்பித்தாள் காணிக்கையாக.'

பாட்டி பாட்டி பாட்டி பாட்டி பாட்டி
பாட்டி பாட்டி பாட்டி பாட்டி பாட்டி
பாட்டி பாட்டி பாட்டி பாட்டி பாட்டி

முற்றும்

மிளகைப் பொடி செய்யும் போது உலர்ந்த பால் கவரில் போட்டு இடித்தால், மிளகு சிதறாமலும் உருண்டு ஓடாமலும், மிளகும் கவரில் ஒட்டிக் கொள்ளாமலும் இருக்கும்.

— உமா.

1வது வாரம்

2வது வாரம்

3வது வாரம்

4வது வாரம்

5வது வாரம்

# தோ!
# வாரங்களுக்குள் உங்கள் எழில்வண்ணம் மேலோங்குகிறது

6வது வாரம்

## க்ளியர்·டோன் எழில்வண்ண திட்டம்

கவனித்துப் பாருங்கள், உங்கள் தோற்றத்தில் எழில் வண்ணமும் பொலிவும் எப்படி இருக்க வேண்டும்? க்ளியர்•டோன் ஃபேர்னெஸ் க்ரீம் மூலம் அது அவ்வண்ணமே ஆக முடியும்.

தினம் இருமுறை மென்மையாக க்ளியர்•டோன் தடவவும். அதன் க்ரீம் போன்ற வழவழப்பு சருமத்தில் ஊடுருவுவதை உணருங்கள். மிருதுவாகவே அருமையான ஃப்ரெஞ்சு மணம்தான். க்ளியர்•டோனின் 4-வழி செயல் தொடங்குகிறது:

இணையற்ற ஒரு எழில்வண்ண உட்பொருள் (வேறெந்த க்ரீமிலும் இல்லாதது) ஆழமாக ஊடுருவிச் சென்று உங்கள் எழில் வண்ணத்தைப் புதுப்பிக்கிறது.

விசேஷமான ஒரு தடுப்புத் திரையிட்டு சூரியனின் கருமையூட்டும் கிரணங்களிலிருந்து நாள் முழுதும் பாதுகாக்கிறது.

செழுமையான 'மாய்ஸ்ச்சரைஸர்' சருமத்தை மிருதுவாக்கி, இளமையின் செழிப்பை வெளிக் கொணருகிறது.

வாரங்கள் செல்லச் செல்ல சுருக்கங்கள் மறைகின்றன.

ஆறே வாரங்களுக்குப்பின், க்ளியர்•டோன் ஏற்படுத்திய மாறுதலைக் காண்பீர்கள்... இந்தியாவெங்கும் ஆயிரக்கணக்கான பெண்கள் கண்டதுபோல்.

இதுவன்றோ சமயம், க்ளியர்·டோன் எழில் வண்ணத்தை நீங்களும் கண்டுகொள்வதற்கு?



**Clear·tone**
the perfect fairness cream
Makes you fairer, keeps you fairer, naturally

லண்டன் • பாரிஸ் • நியூயார்க்

daCunha/NICL/93/87 TAM

## 89 எப்படி இருக்கும்?

**மேஷ ராசி:**

இந்த ஆண்டின் ஆரம்பத்தில் உங்கள் ராசி நாதன் ஆட்சியைப் பெற்றிருப்பதால் உங்களுக்கு நன்மை தரும் ஆண்டாக இருக்கும். இதுவரை முயற்சி செய்தும் முடியாத எந்தப் பணியும்எப்படியும் வெற்றியுடன் முடியும். நீங்கள் ஒரு நீண்ட கால திட்டம் ஒன்றை அமைப்பீர்கள், அது தொழிலாகவும் இருக்கலாம் அல்லது வாணிபத் துறையாகவும் இருக்கலாம். மிகுந்த தன்னம்பிக்கையுடன் இந்த ஆண்டு செயல்படுவீர்கள். செப்டம்பர் மாதத்தில் பொருளாதாரம் சீரடைந்து கணிசமான தொகை வங்கியில் போட வேண்டியிருக்கும். உங்கள் மகன், மகள் திருமணம் நடக்கும். சிவப்பு நிற மனிதரை சந்திப்பீர்கள். அவரால் உங்களுக்கு ஆதாயம் ஏற்படும். அக்டோபர் மாதத்தில் ஒரு நல்ல திருப்பம் உங்கள் வாழ்க்கையில் அமைந்து அதனால் வரும் ஆண்டுகள் சிறப்புடன் வாழும் நிலை உருவாகும். சிறு நெருப்புக் காயமோ உஷ்ணத்தினால் உடல்நலக் குறைவோ ஏற்படலாம்.

**ரிஷப ராசி:**

பொறுப்பு வாய்ந்த பதவி அல்லது வேலை உங்களைத் தேடி வரும். மே மத்தியில் அதன் பலனை அனுபவிப்பீர்கள். நீண்ட நாளாக வரவேண்டிய தொகை ஒன்று உங்களுக்கு

## இந்த மாதம் எப்படி?

ஜனவரி-89

**மேஷ ராசி:**

அஸ்வினி, பரணி, கிருத்திகை 1 — ஆம் பாதம்:

இந்த மாதம் பூராவும் அங்காரகனின் அனுக்கிரகம் உண்டு. குறிப்பாகக் கடன் தொல்லை குறையும். வீட்டு மனை வாங்கும் யோகம் காணப்படுகிறது. இதுவரை விற்காத நிலமோ, மனையோ நல்ல விலையில் விற்கும் வாய்ப்பு உண்டு. பிரிந்தவர் சேரும் நிலை உருவாகிறது. உலைக்களத் தொழிலில் உள்ளவர்கள் எரிபொருள் சாதனக்காரர்கள், பவள வியாபாரிகள், மின் துறையினர் ஆகியோர் ஏற்றம் பெறுவர். சிவப்பு நிறம் கொண்ட அரசாங்க உத்தியோகத்தில் உள்ள ஒருவரால் ஆதாயம் ஏற்படும்., ஓவியக்காரர்களும் சினிமாக் கலைஞர்களும் புகழுடன் பொருளும் பெறுவர். சிலருக்கு எதிர் பார்த்த அரசு அல்லது தனியார் துறையில் வேலை கிடைக்கும்.

**ரிஷப ராசி:**

கிருத்திகை 2, 3, 4 — ஆம் பாதங்கள், ரோகிணி, மிருகசீரிஷம் 1, 2 — ஆம் பாதங்கள்

சாதாரணமான மாதம். அகலக் கால் வைக்க வேண்டாம். புதுத் திட்டங்களை ஒத்திப் போடவும். கோபத்தைக் குறைக்க

நட்டத்தைத் தந்துவிடும். அது கைவிட்டுப் போய்ந்து போனதுதான். ஆனால் ரசாயனம் மருத்துவம் விவசாயம் எதாவது ஒன்றில் மூலம் அந்த நஷ்டம் ஈடு கட்டப்படும். இது வரை இல்லாமல் உங்கள் ஜாதக அமைப் பின்படி நல்ல பலன்கள் வந்தடையும். சனிஸ்வரன் சகல பலன்களையும் தந்து ரட்சிப்பான். தர்மகருமாதிகபதியோகத்தைத் தருவான். திருமணம் ஆகாதவர்களுக்குத் திருமணம் கைகூடி வரும். தென்கிழக்கு திசையிலிருந்து நல்ல செய்திகள் வரும். மார்ச் மாதத்தில் பண வரவு உண்டு. அக்டோபரில் வீடு ஒன்று வாங்குவீர்கள். ஜனனேந்திரியத்தில் சிறு கோளாறு தோன்றும்.

### மிதுன ராசி:

பழைய வீட்டை புதுப்பிக்க வேண்டியது வரும். பிறருக்காக ஒரு பொறுப்பை ஏற்க வேண்டி இருக்கும். அதனால் நவம்பர் மாதத்தில் உணர்ச்சி வசப்படக் கூடிய நிகழ்ச்சி ஒன்று நடைபெறும். ஒரு தொலை தூரப் பிரயாணத்திற்குத் தயாராகுங்கள். அது அநேகமாக செப்டம்பர் வாக்கில் இருக்கலாம். ஏப்ரலில் எதிர்பாராத தன லாபம் வரலாம். கலைஞர்களுக்குப் பாராட்டுக் கிடைக்கும். கட்டிடக் கலைஞர் கள் லாபம் அடைவார்கள். உங்கள் வீட்டி னர் ஆபரணக் கடை அதிபர்களாயின் அபரி மிதமான லாபம் அடைவீர்கள். அதுவும் ஏப்ரல் மாதத்திலிருந்து ஜூன் மாதத்திற்குள் இருக்கலாம். வாகன யோகம் சிலருக்கு ஏற்படும்.

### கடக ராசி:

மே மாதம் லாபம் வரும். புது இடம் ஒன்றுக்கு உல்லாசப் பயணம் சென்று உற்சாகமுடன் திரும்புவீர்கள். உங்களை உலகம் பாராட்டுமளவிற்கு உங்களிடமுள்ள ஒரு கலை உங்களுக்குப் புகழ் சேர்த்துத் தரும் ஆண்டாக இது அமையும். தயக்கம் ஏதுமின்றி எல்லா இடங்களிலும் சென்று பழக வேண்டி வரும். அதனால் நட்பும் உறவும் உறுதிப்பட்டு உங்களுக்கு லாபம் பெருகும். உங்கள் பொறுப்புக்களை மற்ற வர் சுமந்து, உங்களுக்குப் புகழ் தேடித் தருவார்கள். தொண்டையும் கல்லீரலும் சிலருக்குப் பாதிக்கலாம். ஆயினும் பயப்பட ஒன்றுமில்லை.

### சிம்ம ராசி:

ஜூன் மாதம் லாபத்தைத் தரும் மாதமாக அமையும். உத்தியோகத்திலுள்ள பெண்கள் பதவி உயர்வு பெறுவீர்கள். வங்கியில் பணி புரியும் பெண்கள் வீடு கட்ட வேண்டிய வாய்ப்பினைப் பெறுவார்கள். பாடகர் களும் நாடகம் சினிமாக் கலைஞர்களும்

வும். ஏனெனில் வம்பு ஒன்றில் மாட்டிக் கொண்டு விழிக்க வேண்டியிருக்கும். செல் வாக்கு, நாணயம் இவைகளுக்குச் சோத னைக் காலம். எனினும், மாதத்தின் பிற் பகுதி அனுகூல நிலையைத் தரும். மாண வர்களும், விளையாட்டு வீரர்களும் சற்றுக் கூடுதலான பலனைப் பெறுவார்கள். கலை ஞர்களும், இசை அறிஞர்களும் மாதத்தின் பிற்பகுதியில் ஏற்றம் பெறுவர். சிவ ஸ்தலங்க ளுக்கு யாத்திரை செல்லும் வாய்ப்பு ஒரு சிலருக்குக் கிடைக்கும்.

### மிதுன ராசி:

மிருகசீரிஷம் 3, 4 — ஆம் பாதங்கள், புனர் பூசம் 1, 2, 3 — ஆம் பாதங்கள்.

இந்த ராசிக்காரர்களுக்கு 15, 16, 17 தேதிகளில் ஏதாவது எதிர்பாராத லாபம், சுபச் செலவு, உல்லாசமான பிரயாணம் என ஏற்பட்டு மன நிறைவுடன் இருப்பார் கள். இதர நாட்களில் சாதாரண பலனே நடக்கும். ஒரு சிலர் வீட்டு மனை வாகனங் கள் வாங்கும் யோகத்தைப் பெறுவார்கள். செவ்வாய் தோஷம் உள்ள கன்னிப் பெண் களுக்கு 20 — ஆம் தேதிக்கு மேல் திருமணம் அல்லது திருமண சம்பந்தமான வெற்றியு டன் கூடிய பேச்சு வார்த்தைகள் நடை பெறும். வீட்டில் சுப விரயங்கள் உண்டா கும். அதனால் மகிழ்ச்சியும் மனநிறைவும் ஏற்படும். வேலை பார்க்கும் பெண்களுக்குப் பதவி உயர்வு மாதத்தின் பிற்பகுதியில் ஏற்பட வாய்ப்பு உள்ளது. தசா புக்தி சரியில் லாத சில பெண்கள் தீப்புண், சிறு காயங் கள் இவைகளுக்கு ஆளாக நேரலாம்.

### கடக ராசி:

புனர்பூசம் 4 — ஆம் பாதம், பூசம், ஆயில் யம்.

கடக ராசிக்காரர்களில் பாடகர்களாக உள்ள பெண்மணிகளுக்கு நல்ல கால கட்டம் ஆரம்பமாகிறது. இதுவரை மேடை ஏறிப் பாடாத பெண்களுக்கு அந்த வாய்ப்புக் கிடைக்கும். 9 — ஆம் தேதி முதல் 23 — ஆம் தேதிவரை நல்ல சூழ்நிலை உருவாகி பெயரும், புகழும் பெறும் பாக் கியம் கிடைக்கும். கலைத்துறையில் குறிப் பாக சினிமா, டி. வி., துறையில் உள்ள சகோதரிகளுக்கு லாபமான நிலை. சிலருக்கு எதிர்பாராத வாய்ப்புக்கள் கிடைக்கும். புக ழேணியின் உச்சிக்குக் கூட செல்லலாம். பொன்னிறமான நிறமும் கம்பீரமான வசன மும் பேசக் கூடிய பெண்மணிகளுக்கு சீரும், சிறப்பும் ஏற்படும். ஒரு சிலர் பொன், வெள்ளி, நகைகளை வாங்குவார்கள். அல்லது பரிசாகப் பெறுவார்கள். துவரை, அவரை, நெல் வியாபாரிகளுக்கு நல்ல

"அதிக அளவு நெய்,
அதிக மணம் தருகிறது
**ஆவின்**
வெண்ணெய்"




ஆம். இந்த இல்லத்தரசி கூறுவது நூற்றுக்கு நூறு உண்மை. அனுபவத்தில் கண்ட உண்மை! ஆவின் வெண்ணெய் புதிய, சுத்தமான பாலிலிருந்து தயாரிக்கப்படுகிறது. நவீனமான முறையில் தானியங்கி இயந்திரங்கள் மூலம் வெண்ணெயிலிருந்து தண்ணீர் முழுமையாக அகற்றப்பட்டு, பேக் செய்யப்படுகிறது. இதனால் வெண்ணெய் காய்ச்சும் போது அதிக அளவு நெய் கிடைக்கிறது.

ஆகவே ஆவின் வெண்ணெய் சிக்கனமானதாக அமைகிறது. புதுத்தன்மை மற்றும் உயர்ந்த தரம் காரணமாக நெய் மிகுந்த மணமுள்ளதாகவும் இருக்கிறது. ஆவின் வெண்ணெய் நிகரற்று விளங்குகிறது... அதன் தரம், தூய்மை, புதுத்தன்மை காரணமாக! இன்றே வாங்கிப் பாருங்கள். உண்மை உங்களுக்கு விளங்கும்.

**ஆவின்**
**வெண்ணெய்**

**வெண்மையானது · தரமானது · சிக்கனமானது.**

கீர்த்தி அடைவார்கள். ஒரு சிலருக்கு ஆகஸ்ட் மாதத்தில் கண்களில் கோளாறு தோன்றும். மார்கழி, தை மாதங்களில் புனிதத் தலங்களுக்குச் செல்லும் வாய்ப்பு உண்டு. துணிக் கடைக்காரர்கள், வெள்ளி வியாபாரிகள் நல்லெண்ணெய் வியாபாரிகள் நல்ல லாபம் பெறுவர். அதிக உஷ்ணத்தினால் ஒரு சிலருக்கு உடல் நலக் குறைவுகள் மே மாதத்தில் ஏற்படலாம்.

**கன்னி ராசி:**

சிதைந்து போன உங்கள் சிந்தனைகள் இந்த ஆண்டு மீண்டும் தழைத்துத் தங்களுக்குரியதோர் எதிர்காலத்தை அமைத்துக் கொடுக்கும். இதுவரை தோல்வியை அனுபவித்த அரசியல்வாதியானாலும், ஆட்ட வீரரானாலும் அரங்குகளில் ஆடுகின்றவர்களானாலும் — எப்படிப்பட்டவர்களாக இருந்தாலும் — எப்படியாவது முன்னேற்றம் உங்களை வந்தடையும். குறிப்பாகப் பத்திரிகைத் துறையிலும் எழுத்துத் துறையிலும் உங்களுக்கு பிப்ரவரியிலிருந்து ஏற்றமிகு காலம் ஆரம்பமாகிறது. அக்டோபருக்குப் பிறகு பட்டமும் பரிசும் வந்து அடையும். உலகம் உங்களைப் புரிந்து கொண்டு பாராட்டுகிற நிலை ஏற்படும் ஒரு நல்ல முன்னேற்றமான ஆண்டு.

**துலா ராசி:**

தொழிலை விருத்தி செய்யத்தக்க ஆண்டு. நீண்ட நாட்களாக எதிர்பார்த்து ஏமாந்து வந்த செயல் ஒன்று திடீரென வெற்றியுடன் முடியும். அதுவும் ஆகஸ்டிலோ செப்டம்பரிலோ நடக்கும். சில சகோதரிகளுக்கு வெளிநாட்டுப் பயணம் ஒன்று ஏற்படும். காணாமல் போன ஒருவரைப் பற்றிய தகவல் கிடைக்கலாம். கார்த்திகை மாதத்தில் பிறந்த பெண்களுக்குத் தடைப்பட்ட திருமணம் நிறைவேறும். படித்து முடித்து வேலைக்கு முயற்சி செய்து வந்த பெண்களுக்குத் தற்காலிகமாக வேலை கிடைக்கும். அடுத்த ஆண்டு அந்தப் பணி நிரந்தரப் பணியாக மாறலாம். துணிக் கடைக்காரர்களும் இசைக் கலைஞர்களும் கூடுதலான லாபம் பெறுவர். பிரிந்திருந்த தம்பதிகள் ஒன்றாகும் வாய்ப்பும் ஏற்படும்.

**விருச்சிக ராசி:**

வெற்றித் திருமகள் உங்களைப் பார்த்துப் புன்னகைப் பூக்கிறாள். இந்த ஆண்டு குறிப்பாக விஜயதசமியின் போது ஒரு புதுத் திட்டம் தீட்டி அதை ஆரம்பிப்பீர்கள். அது உங்களுக்கு அபரிமிதமான லாபத்தை அள்ளித் தரும். சினிமாத் துறையினராக இருந்தால் நீங்கள் இந்த ஆண்டு எடுக்கும் படம் சூப்பர் ஹிட்டுதான். நடிகர்களுக்கு

வியாபாரம் ஏற்பட்டு லாபகரமான நிலை உண்டாகும்.

**சிம்ம ராசி:**

மகம், பூரம், உத்திரம் *1* — ஆம் பாதம்.

மாதத்தின் முதல் 15 நாட்களும், கடைசி 5 நாட்களும் நன்மை தரக்கூடியவை. மற்ற நாட்களில் சாதாரண பலன்தான் எதிர்பார்க்கலாம். சூரிய திசை, செவ்வாய் திசை நடக்கும் பெண்களுக்குக் கலை உலகில் பாராட்டும் பரிசும் கிடைக்கும். ஒரு சிலருக்கு வெளிநாட்டு யாத்திரை கைகூடி வரும். உஷ்ண சம்பந்தமான நோய்களும் பாதிக்கும். கண் சம்பந்தமாக மருத்துவரை அணுக வேண்டிய சூழ்நிலை சிலருக்கு உண்டு. வரவும் செலவும் சரியாகவே இருக்கும். உறவினர் வருகையும், சுபச் செலவும் சிலருக்குப் பொருளாதார நெருக்கடியை உண்டு பண்ணும்.

**கன்னி ராசி:**

உத்திரம் *2, 3, 4* — ஆம் பாதம், ஹஸ்தம், சித்திரை *1, 2* — ஆம் பாதங்கள்.

மாதத்தின் பிற்பகுதியிலிருந்து ஐந்து நாட்களில் திருமணம் ஆகாத பெண்களுக்கு கட்டாயம் திருமணம் கைகூடி வரும். தடைப்பட்ட பேச்சு வார்த்தை நடந்தும் சரியான பதில் கிடைக்காத திருமண முயற்சிகள் இனிது நிறைவேறுகின்ற காலகட்டம். குருவின் பார்வையும் அனுகூலமாக இருக்கும். எனவே புதிய தொழில் ஆரம்பிக்க புது மனை புக, வாங்க ஏற்றதோர் சூழ்நிலை உண்டாக இந்த மாதம் பூராவும் வாய்ப்பு உள்ளது. இதுவரை இருந்த இழுபறிகள் எந்த விஷயத்திலும் இனி இருக்காது. மருத்துவம், ரசாயனம், வெளிநாட்டுப் பிரயாணம், ஆகிய எந்தத் துறையிலும் வெற்றியே.

**துலா ராசி:**

சித்திரை *3, 4* — ஆம் பாதங்கள், சுவாதி, விசாகம் *1, 2, 3* — ஆம் பாதங்கள்

இதை விக்கினம் இல்லா லக்கினம் என்பர். இப்படிப்பட்ட துலா ராசிக்காரர்களுக்கு ஜனவரி *23* — ஆம் தேதிக்குமேல் விருதுகளும் பரிசுகளும் கிடைக்கும். குடியரசு தினத்தன்றே கூட அப்படிப்பட்ட வாய்ப்பு இந்த ராசிக்கலைஞர்களுக்கு ஏற்படும். கடன் தொல்லை குறையும். கணவன், மனைவி, உறவுகள் நெருக்கமாக இருக்கும். இதுவரை வந்த பிணக்கும், சில்லறைத் தொல்லைகளும், சண்டைகளும் இந்த மாதத்திலிருந்து சரியாகிவிடும். தொழில் நிலையும் உத்தியோக நிலையும் ஏறுமுகமாக உள்ளது. எதிலும் ஒரு நிதானமும் தொழில்

நல்ல ஆண்டு. அரசியல்வாதிகள் அமோக மான நன்மைகளை அடைவர். வேலை பார்க்கும் சகோதரிகளுக்கு வீடு கட்டும் யோகம் தானாக வந்து சேரும். முன் கோபக்காரர்களும், இரத்தக் கொதிப்பு உள்ளவர்களும் எச்சரிக்கையுடன் இருக்க வேண்டிய ஆண்டு. கடன் தொல்லை நீங்கி மன அமைதி ஏற்படும். ஏழரைச் சனி நீங்கி எதிலும் ஒரு மகிழ்ச்சி உண்டாகும்.

**தனுசு ராசி:**

ராசிநாதன் பகை வீட்டில் இருந்தாலும் பார்வை உங்கள் மேலேயே இருப்பதால் இதுவரை இருந்த தடையும் தோஷமும் நீங்குகிறது. கோர்ட் விவகாரங்களில் வெற்றி ஏற்படும். வீண் செலவுகள் குறையும். இதுவரை ஒரு கணிசமான தொகை வட்டிக்காகப் போய்க் கொண்டிருந்தது. அந்தக் கடன் நீங்கி மனத்திற்கு ஒரு தெம்பை அளிக்கும். மகனுக்கு ஒரு நல்ல இடத்தில் உத்தியோகம் கிடைக்கும். மகளுக்கு மணம் கைகூடிவரும். மொத்தத்தில் சென்ற சில ஆண்டுகளில் இருந்தது போலன்றி தொல்லைகள் படிப் படியாகக் குறையும். பொங்கு சனியால் ஒரு சிலருக்குப் பொருளாதாரத்தில் மேம்பாடு கிடைக்கும். வாகனத்தைக் கவனமுடன் கையாளுவது நல்லது. விரயம் ஏற்படலாம்.

**மகர ராசி:**

உங்கள் ராசிநாதன் உங்கள் வீட்டிலேயே இருக்கிறான். பின் என்ன குறை? ஏழரைச் சனி எந்த நஷ்டமும் கஷ்டமும் வராது இரம்சிப்பான். இரும்புத் தொழில் செய்யும் கணவன்மார்கள் தம் தொழிலில் எதிர்பாராத தன லாபத்தை அடைவார்கள் குறிப்பாக உங்கள் கணவர் ரிஷபராசிக்காரர்களாக இருந்தால் இன்னும் கூடுதலான நன்மை உண்டு. இதுவரை உங்கள் இல்லத்தில் இருந்த சிரமங்கள் கடன்கள் இவை தீர்ந்து இன்பம் பொங்கும். திருநள்ளாற்று சனீஸ்வரனை வணங்க வளம் பொங்கும். ஆரம்பத்தில் சற்று மந்தமாக இருந்தாலும் அடுத்து வரும் ஒன்பது மாதங்களில் கூடுதலான பலன் விளையும்.

**கும்ப ராசி:**

பன்னிரண்டில் ஆட்சி புரியும் சனீஸ்வரன் தொல்லைகளை குறைத்துவிடுவான். இட மாற்றம் நிகழலாம். அது நன்மைக்காகவே இருக்கும். முதல் மூன்று மாதங்களில் கடன் தொல்லை குறைந்து மன நிம்மதி ஏற்படும். குழந்தைகளில் பிடிவாதப் போக்கு மனத்திற்கு 'டென்ஷன்' ஏற்படுத்தும். ஒரு நல்ல தீர்த்த யாத்திரை போக வேண்டி இருக்கும். வீட்டு யோகம் உண்டு. கொடுக்கல் வாங்கலில் சரள நிலை இருக்கும். நன்மையும்

செய்ய மனோபலமும் ஏற்படும். வீட்டில் மகிழ்ச்சியும் மனநிறைவும் ஏற்படும். தனிப்பட்ட திருமணங்கள் கைகூடி வரலாம்.

**விருச்சிக ராசி:**

விசாகம் 4 — ஆம் பாதம், அனுஷம், கேட்டை.

அங்காரகன் ஆட்சியில் அமைந்திருப்பதாலும், குருவின் பார்வை கிடைப்பதாலும், விருச்சிக ராசிக்காரர்களுக்கு வீண் தொல்லை இல்லை. வீட்டு மனை வாங்குவீர்கள். அல்லது பழைய நிலத்தை, வீட்டை நல்ல விலைக்கு விற்கவும், புதியது வாங்கவும் யோகம் கைகூடி வருகிறது. ஒரு சிலருக்கு உலோகக் கம்பெனியில் வேலை கிடைக்கும். பவழ, செம்பு வியாபாரிகள் ஏற்றம் பெறுவார்கள். வேலைக்குச் செல்லும் சகோதரிகளுக்கு விரும்பியபடி மாற்றமோ, பதவி ஏற்றமோ ஏற்படலாம். சந்திரனுக்கு இது நீச வீடானாலும், இந்த மாதத்தில் பலன் கூடுதலாகவே நடக்கும். வீட்டில் சுப நிகழ்ச்சிகள் அது திருமணமாகக் கூட இருக்கலாம். கட்டாயம் நடக்கும்.

**தனுசு ராசி:**

மூலம், பூராடம், உத்திராடம் 1 — ஆம் பாதம்.

மாதத்தின் முதல் வாரம் ஏமாற்றத்தையே தரும். எதிலும் எதிர்ப்போ, தோல்வியோ ஏற்படுகிறதொரு மந்தமான நிலைதான் தெரிகிறது. அடுத்து வரும் இருபது நாட்களில் சற்று முன்னேற்றம் ஏற்படும். சற்று சுமாரான மாதம்தான் என்று கூற வேண்டியுள்ளது. கோசார சம்பந்தமான ஒரு வெற்றி மாதம் எனக் கூற முடியவில்லை. எதிலும் நிதானம் எப்போதும் நிதானம் என்ற கொள்கைக்கு ஏற்ற மாதம். கலைஞர்கள் கட்டிடத் தொழிலாளிகள் சற்றுக் கவனமாக இருக்க வேண்டிய மாதம்.

**மகர ராசி:**

உத்திராடம் 2, 3, 4 — ஆம் பாதங்கள், திருவோணம், அவிட்டம் 1, 2 — ஆம் பாதங்கள்.

தனுசு இராசிக்காரர்களைப் போலவே அனுபவித்துக் கழிக்க வேண்டிய மாதம். மகர ராசிப் பெண்களுக்கு இந்த மாதம் அவ்வளவாக முகராசி இல்லை., எனவே கடன் தொல்லை உண்டு. கூடுதலான செலவினங்கள் ஏற்படும். எப்படித்தான் சிக்கனமாக இருந்தாலும் எதிர்பாராத செலவினங்கள் ஏற்பட்டு மனம் அமைதியை இழக்கும். மனசஞ்சலமும், சகுனத் தடைகளும் ஏற்படலாம். இரும்புத் தொழில், உரத் தொழில் சம்பந்தப்பட்ட துறைகளில் வேலை செய்யும் பெண்கள் சற்றுக் கூடுதலான பலனைப்

குறைவும் சரி சமமாக நடக்கும் ஆண்டாக இருக்கும். ஒரு சிலருக்கு ஆபரணம் வாங்கும் யோகம் உண்டு.

**மீன ராசி:**

லாபகரமான ஆண்டாக இருக்கும். தொழில் முன்னேற்றம் ஏற்படும். வாகனத் துறையினர் போன்றோர் ஏற்றம் பெறுவர். கலைஞர்களுக்கும் இசைச் சொற்பொழி வாளர்களுக்கும் யோக காலம் ஆரம்பிக்கும். சினிமாத் துறையினர் சிறந்த முறையில் பாராட்டப்படுவர். மாணவர்களாயிருப்பின் உபகாரச் சம்பளம் பெறும் வாய்ப்பு உண்டு. வெளிநாட்டுச் செய்திகள் எதிர் பார்த்தபடி நன்மையைத் தரும். இதுவரை இருந்த பாகப்பிரிவினை தகராறு தீர்ந்து மன நிறைவு ஏற்படும். புதிய வீட்டு, வாகன யோகம் ஏற்படும். நீண்ட காலத் திட்டங்கள் தீட்டப்பட்டு அவைகளை நிறைவேற்றத் தக்க வாய்ப்பு வரும்.

நேயர்களுக்கு இப்புது வருடத்தில் நல்ல ஆரோக்கியமும், ஆயுளும், தனதான்யாதிகள் சேரவும் வாழ்த்துகின்றோம்.

பெறுவார்கள்.

**கும்ப ராசி:**

அவிட்டம் 3, 4 — ஆம் பாதங்கள், சதயம், பூரட்டாதி 1, 2, 3, — ஆம் பாதங்கள்.

கும்பராசிப் பெண்கள் ஜம்பம் அடித்துக் கொள்ளத்தக்க வகையில் சாதனை புரியக் கூடிய மாதம். வெள்ளிப் பாத்திரமும், பொன் நகையும் வாங்கிப் புன்னகை பூக்க வேண்டிய நிலை சிலருக்கு ஏற்படும். திடீர்த் திருமணம் ஊர்ப் பிரயாணம் எனப் பல வகைகளில் மனத்தில் உற்சாகம் ஏற்படும். எதிர்பாராத தன லாபம் உண்டு. இதுவரை இருந்த கடன் தொல்லை நீங்கி விடும். ராசிநாதன் 11 — லிருந்து கொண்டு பலவித மான நன்மைகளைத் தருகிறார். பாடலரசிகளும் ஆடலரசிகளும் பரிசையும் பாராட்டையும் பெறுவார்கள். வீடு, மனை வாங்கும் யோகமுண்டு. சிலர் வாகனங்களைப் பெறுவர். நீண்ட காலம் வியாதியால் அவதியுற்றவர்கள் அதிலிருந்து விடுதலை பெறுவார்கள்.

**மீன ராசி:**

பூரட்டாதி 4 — ஆம் பாதம், உத்திரட்டாதி, ரேவதி.

மீனராசிக்காரர்கள் மன நிம்மதியும், மகிழ்வும் ஏற்படுகின்ற சூழ்நிலை உருவாகிறது. ஏழு, எட்டு தேதிகளில் எவ்விதத்திலாவது தனலாபம் ஏற்படும். வருமானத்தில், மீதமில்லாவிட்டாலும், பற்றாக்குறை கண்டிப்பாக ஏற்படாது. பதவியேற்றமும், அதன் காரணமாக கௌரவமும் மதிப்பும் கூடுவதும் கண்கூடாகக் காணலாம். நல்ல காலகட்டம் உருவாகும். தசா புக்திகள் நன்கு அமைந்துள்ளவர்களுக்கு வீடு, வாகன யோகங்கள் உண்டு. அபூர்வமான ஆலய தரிசனமும், குழந்தைப் பேறும் சிலருக்கு ஏற்படும். செல்வமும் செல்வாக்கும் தானாக இவர்களை வந்தடையும். இதுவரை நீடித்த வேதனை பட்ட காலம் சாதனை புரியும் காலமாக ஆரம்பமாகிறது. தடைப்பட்ட தொழில், பாதியில் நின்ற வீட்டு திட்டம் இவை முடிந்து மன மகிழ்ச்சியைத் தரும்.

— ஜெயலட்சுமி கிருஷ்ணன்.

ஒரு துண்டு வாழைப்பழத்துடன், ஒரு கரண்டி மைதா மாவு, இரண்டு டேபிள் ஸ்பூன் ரஸ்க் தூள், ஒரு கரண்டி, திரிய வைத்த பாலேடு இவைகளைச் சேர்த்து, கெட்டியாகப் பிசையவும். எண்ணெய் அல்லது டால்டாவில் சிறுசிறு உருண்டைகளாக உருட்டிப் போட்டு, பொன்னிறமானதும் சர்க்கரை போட்டு 'குலோப் ஜாமுன்' செய்து சாப்பிட்டால் சுவையாக இருக்கும்.

— உமா.



உங்கள் வீட்டுப்பூந்தொட்டிகள் பழையதாகக் காட்சியளிக்கிறதா? கொஞ்சம் செம்மண் எடுத்துத் தண்ணீரில் கரைத்து ஒரு துணியால், தொட்டிகளை அழகாக மெழுகி விடுங்கள். புத்தம் புதியதாகக் காட்சியளிப்பதோடு, செலவும் மிகக் குறைவு. இது என் அனுபவத்தில் கண்ட உண்மை.

— கல்யாணிகுமார்.

